உ

ஓம் தத் சத்
பரப் பிரஹ்மணே நம:




# யுக்திப் பிரகாசம்



உபநிஷத்

अणोरणीयान् महतो महीयानात्मा
गुहायां निहितोऽस्य जंतोः ॥ (கடவ்லி-2-20)

அணுவிற் கணு மகத்திற்கு மகத்தா யுள்ள ஆத்மா இந்தச் சீவர்களின் குகையி லிருக்கின்றது.

श्रुति स्मृति पुराणैर्यद्गीयते ब्रह्म निर्मलम् ।
मुमुक्षूणां हितार्थाय तद्युक्त्यात्र प्रकाश्यते ॥ १ ॥

இதன் பொருள்:— எந்த நிர்மலப் பிரஹமம் (உபநிஷத் முதலிய) சுருதி, (மநு முதலிய) ஸ்மிருதி, (பாரதம், பாகவதம் முதலிய) புராணங்களால் (நித்யம்) துதிக்கப்படுகின்றதோ, அது ஈண்டு முமுட்சுக்களின் ஹிதத்தின் பொருட்டு யுக்தியால் கூறப்படுகின்றது.

## 1. நான்கு ஸ்திரீகளின் திருஷ்டாந்தத்தினல் யதார்த்த ஞாந மடைதற்கு யுக்தி.

பின், யுக்திப் பிரகாசம் எழுதப்படுகின்றது.

நான்கு ஸ்திரீகளின் திருஷ்டாந்தத்தினல், யதார்த்த ஞாந மடைதற்கு முதல் யுக்தி கூறப்படுகின்றது. இதில், முதலில் திருஷ்டாந்தம் கூறப்படுகின்றது. ஒரு புருஷன்

திரவியத்தி னிச்சையினால் வீட்டினின்றும் வெளியே புற
பட்டு வநத்திற் சென்றான். ஆண்டு, ஒரு புருஷன் உட்கார
திருப்பதாகப் பார்த்தான். அப் பொழுது, அப் புருஷ
சமீபத்திற் சென்று, 'பிரபுவே! எனக்கு மிகுந்த திரவிய
கிடைக்கும்படி என்னிடத்தில் கிருபை வைப்பீராக' என்
இவன் பிரார்த்தனை செய்தான். அப் பொழுது அப் புருஷ
அவனுக்கு ஒரு கூந்தாலமும், ஒரு வாளும் கொடுத்தா
சமீபத்தில் ஒரு கோயிலைக் காண்பித்து, 'நீ இக் கோயினு
செல் உனக்குத் திரவியங் கிடைக்கும்' என்று கூறினான். அ
புருஷன் அக் கோவிலினுட் சென்று பார்க்கும்போது, நான்கு
ஸ்திரிகள் நின்றிருக்கக் கண்டனன். புருஷன் அவர்களை
நோக்கி, 'நீங்கள் யார்? எக் குலத்தவர்? நுங்கள் பெய
யாவை?' என்று கேட்டனன். அப் பொழுது அந்த
ஸ்திரிகள், 'நாங்கள் ஸ்திரிகள், பிராமண குலத்தவர்கள்'
என்று கூறி, அவர்கட்கு எவ் வெப் பெயர் அக் கா லிருந்தன
வோ, அவ் வப் பெயரையு மறிவித்தனர். மீண்டும், அப்
புருஷன், 'நீங்க ளெங் கிருக்கின்றீர்க' ளென்று கேட்டனன்.
அப் பொழுது, ஒரு ஸ்திரி, 'நான் அக்கி சாலையி லிருக்கின்றே'
னென்றனள். வே றொருத்தி, 'நான் துவாரத்தி லிருக்
கின்றே' னென்றனள். மூன்று மவள், 'நான் தர்ம சாலையி
லிருக்கின்றே' னென்றனள். நான்கா மவள், 'நான் அந்தப்
புரத்தி லிருக்கின்றே' னென்றனள். இவ் வளவும் கூறிய
பின்னர், ஸ்திரிகள் மறைந்து கொண்டார்கள். பின்னர்,
நான்கு புருஷர்கள் வெளிப்பட்டனர். பின்னர், அவர்களை
நோக்கி, 'நீங்கள் யார்? உங்களின் பெயர் யாவை? நீங்க ளெக்
குலத்தவர்' என்று கேட்டான். அப் பொழுது, அவர்கள்,

'நாங்கள் புருஷர்கள், க்ஷத்ரிய குலத்தவர், எங்கட்கு இவ் விப் பெயராம்' என்று கூறினர். அப் பொழுது, மீண்டும், 'நீங்க ளெங் கிருக்கின்றீர்க' ளென்று வினவினன். அப் பொழுது, ஒருவன், 'நான் அக்நி சாலையி லிருக்கின்றே' னென்றனன். அக் கால், 'அக்நி சாலையி லிப் பெயருடைய ஸ்திரீ இருக்கின்றனளா?' வென்று புருஷன் கேட்டனன். அதற்கு அவன், 'அவள் எனது ஸ்திரீயே' என்று கூறினன். அவளுக்கு அங்கு என்ன வேலை? அவளை அங்கு வைத்துக் கொள்ள வேண்டு மாயின், தாசியாக்கி வைத்துக் கொள்க (என்றனன்). மற் றொருவனை, 'நீ எங் கிருக்கின்று' யென்று கேட்டனன். அதற்கு அவன், 'நான் துவாரத்தி லிருக்கின் றேன்' என்றான்; அப் பொழுது அப் புருஷன், 'அங்கு இப் பெயருடைய ஸ்திரீ இருக்கின்றனளா?' என்றனன். அதற்கு அவன், 'அவள் எனது ஸ்திரீயே' என்றனன். அவளுக்கு அங்கு வேலை யாது? அங்கு அவளை வைத்துக் கொள்ள வேண்டு மாயின், தாசி யாக்கி வைத்துக் கொள்க (என்றனன்). மூன்றா மவனை, 'நீ எங் கிருக்கின்றாய்' என்றனன். அவன், 'நான் தர்ம சாலையி லிருக்கின்றேன்' என்று கூறினன். அப் பொழுது அப் புருஷன், 'இப் பெயருடைய ஒரு ஸ்திரீ ஆண் டிருக்கின்றனளா?' என்றனன். அதற் கவன், 'அவள் எனது ஸ்திரீயே' என்று கூறினான். ஆண் டவளுக்கு வேலை யாது? அவ ளாண் டிருக்க வேண்டு மாயின், தாசி யாக்கி வைத்துக் கொள்க (என்றனன்). நான்கா மவனை, 'நீ எங் கிருக்கின்றாய்' என்றனன். அதற் கவன், 'நான் அந்தப் புரத்தி லிருக்கின்றேன்' என்றனன். அப் பொழுது அப் புருஷன், 'இப் பெய ருடைய ஸ்திரீ ஆண் டிருக்கின்றனளா?'

என்றனன். அதற் கவன், 'அவள் எனது ஸ்திரீயே' என்று கூறினன். அவளுக்கு ஆண்டு வேலை யாது? அவள் ஆண்டிருக்க வேண்டு மாயின், அவளைத் தாசி யாக்கி வைத்துக் கொள்க (என்றனன்). அப் பொழுது அப் புருஷன், எல்லோருடைய வாய் மொழிகளையுங் கேட்டு, 'நீங்கள் மிகுதியும் அநர்த்தஞ் செய்தீர்கள். க்ஷத்ரியர்களா யிருந்து, பிராம்மண ஸ்திரீகளின் வீட்டைச் சுற்றுகின்றீர்கள். உங்களைத் தண்டித்தல் யோக்ய மாம்' என்று இவ் வளவுங் கூறி, வாளை யுருவி வெவ் வேறாக நால்வரது சிரசுகளையும் வெட்டி விட்டனன். அப் பொழுது மீண்டும், நான்கு ஸ்திரீகள் வெளிப்பட்டு, 'இவன் எனது புருஷன்; நான் இவன் ஸம்ஸாரம்' என்று கூறினர். எப் பொழுது இந்த ஸ்திரீகள், தம்பதியோடு சக கமனஞ் செய்யத் தயா ரானார்களோ? அப் பொழுது, அந்தப் புரத்தி லிருந்த ஸ்திரீயைத் தான் வைத்துக் கொண்டு, 'நீ என்னிடத்தி லிருப்பாயாக' என்று கூறினன். பின்னர், மூன்று ஸ்திரீகளை, நான்கு புருஷர்களுடன் எரித்து விட்டனன். பின்னர், அப் புருஷன், ஸ்திரீயைக் கூட்டிக் கொண்டு, கூந்தாலத்தினால் தோண்ட ஆரம்பித்தனன். முதலில் துவாரத்தைத் தோண்டினன். பின்னர், அக்நி சாலையைத் தோண்டினன்; பின்னர், தர்ம சாலையைத் தோண்டினன்; பின்னர், அந்தப் புரத்திற் சென்று ஒரு கல் வைத்திருப்பதைப் பார்த்தான். அந்தக் கல்லைக் கூந்தாலத்தினா லடித்தனன். அப்பொழுது, அதனின்றும் ஒரு புருஷன் வெளி வந்து அப் புருஷனிடத்தில் லய மாயினன்; பின்னர், அவன் லயமானதும், அந்த ஸ்திரீ, கிழவி யாயினள். அவள் கிழவியானதும், புருஷனுக்குத் திரவியத்தின் இச்சை யின்றி, அவ்விடத்தி

ழுட்கார்ந்திருந்தனன். பின்னர், வேறு நான்கு ஸ்த்ரிகள் வெளி வந்தனர். . அந் நான்கு ஸ்த்ரிகளையும் தன்னிடத்தில் வைத்துக் கொண்டு, அவர்களோடு சேர்ந்து காரியஞ் செய்ய ஆரம்பித்தனன். கிழவியான ஸ்த்ரீ சேவை செய் தனள். கத்தியும், கூந்தாலமும் எவனிடத்தி லிருக்கின்றன வோ?, அப் புருஷன் அ(வி)ரக்தன் எனப்படுகிறான். இது திருஷ்டாந்த மாம்.

இப் பொழுது தார்ஷ்டாந்தங் கூறப்படுகின்றது.

புருஷன் யா ரெனின், முமுட்சு வாவன். திரவியத்தின் இச்சை என்பது, தனது சொரூபத்தின் பிராப்தி யாம். அந்த முமுட்சு புருஷன், வர்ண ரூப கிரகத்தினை விட்டு, ஆசிரம ஸ்தான ரூப வனத்திற் சென்றான். (அங்குக்) கிடைத்த புருஷன் யார்? எனின், சத் குரு வாவர். திரவியப் பிராப்தியி னிச்சை யா தெனின், பிரபுவே! எனது சொரூபத்தி னடை வுண் டாக வேண்டு மென்ப தாம். குருவால் கொடுக்கப்பட்ட கூந்தாலமும், வாளும், யாவை? எனின், விசார ரூப கூந்தால மும், வைராக்ய ரூப வாளு மாம். காண்பிக்கப்பட்ட கோவில் தேஹ மாம். 'நீ இதில் பிரவேசித்தால், உனக்குத் திரவிய ஸ்தான ரூப ஆத்ம சொரூபத்தின் பிராப்தி யுண்டா' மென்று கூறினர். இவன் * சங்காத ரூப கோவிலிற் பிரவேசித்த

---

* சங்காதம்— பஞ்ச மஹா பூதங்களின் பஞ்சீகரணத்தால் - அதாவது - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசங்களை - முதலில் இரண்டு இரண்டு அரைப் பாகம் செய்க. ஒரு அரைப் பாகத் தினை, நான்கு பாகம் செய்க. அஃ தரைக் கால் அரைக் கால் பாக மாகும். மீண்டும் எப் பூதத்தின் அரைப் பாகம் இருக்

வுடன், அந்தர் திருஷ்டியால் நான்கு ஸ்த்ரீகள் பார்க்கப் பட்டனர். நால்வரிடத்தும், 'நீங்கள் யார்? குலம் யாவை? பெயர் யாவை? எங்கு இருக்கின்றீர்கள்?' என்று கேட்கப் பட்டதும், நாங்கள் உத்தம குலத்தினை யுடைய பிராமண ஸ்த்ரீகள் என்று கூறினர். ஒரு ஸ்த்ரீ, 'எனது பெயர் லஜ்ஜை யாம். அக்நி சாலையி (நேத்திரத்தி) லிருக்கின்றேன்' என்ற னள். பிரத்தியட்சமாகப் பார்க்கப்பட்டது. மற்றொரு ஸ்த்ரீ, 'நான் துவார (முக) த்தில் இருக்கின்றேன். எனது பெயர் தயை யாம்' என்றனள். மூன்று மவள், 'நான் தர்ம சாலையி (ஹிருதயத்தி) லிருக்கின்றேன். எனது பெயர் கீர்த்தி யாம்' என்று கூறினள். நான்கா மவள், 'நான் அந்தப் புர (அந்தக் கரண) த்தி லிருக்கின்றேன் (எனது பெயர் திருதி யாம்)' என்று கூறினள். உத்தம குல மென்று ஏன் கூறப்பட்ட தெனின், மிகுந்த புண்ணியத்தினு லுண்டாவதனு லாம் என்று கூறி, நான்கு ஸ்த்ரீகளும் மறைந்து போயினர்.

பின் நான்கு புருஷர்கள் வெளிப்பட்டனர். ஒருவ னிடத்தில், 'நீ யார்? உன் பெயர் யாது?' என்று கேட்கப் பட்டது. அவன், 'நான் க்ஷத்ரியன்; என் பெயர் காமம்; நான் அக்நி சாலையி (நேத்திரத்தி) லிருக்கின்றேன்' என்று

---

கின்றதோ, அதில் (தனது) அரைக் கால் பாகத்தினைச் சேர்க்கா மல், மற்றைய நான்கு பூதங்களின் அரைக் கால் பாகத்தினைச் சேர்க்க. எங்ஙனம்? பிருதிவியின் அரைப் பாகத்தில், பிருதிவியின் அரைக் கால் பாகத்தினைச் சேர்க்காமல், ஜலம், அக்நி, வாயு, ஆகாசம் என்பவற்றின் அரைக் கால் பாகத்தினைச் சேர்க்க. இவ் வாறு எல்லாப் பூதங்களையும் சேர்க்கில், எச் சரீரம் உண்டா கின்றதோ, அஃ தென்பது பொருளாம்.

கூறினன். ‘நேத்திரத்தில் லஜ்ஜை யிருக்கின்றதா?’ என்று புருஷன் கேட்டனன். அதற்கு அவன், ‘யாண்டு யா னிருக் கின்றனனோ, ஆண்டு லஜ்ஜை எங்ஙன மிருக்கும்?’ என்று கூறினன். இல்லை என்பது பொரு ளாம். அதற்குப் பிரமாணம் என்னை யெனின், எப் பொழுது, இந்திரன் காமத்தினால் வியாகூலத்தினை யடைந்தனனோ, அப் பொழுது, கௌதம ரிஷி பூஜிக்கத் தக்கவராக இருந்தும், அவரது ஸ்த்ரீயின் பொருட்டு, லஜ்ஜையினை விட்டு, அவரது வீட்டிற்குச் சென்றனன். சென்றா னாயினும், காமத்தினால் என்ன பயன் உண்டாயின தெனின், தேகத்தில் ஆயிரம் யோநி யாயின மையே யாம்.

இவ் வாறே, வேறு புருஷனை, ‘நீ யார்? எங் கிருக்கின்றாய்? பெயர் யாது?’ என்று வினவினன். அதற் கவன், ‘என் பெயர் குரோதம்; அவார (முக) த்தி லிருக்கின்றேன்’ என்று கூறினன். அப் புருஷன், ‘ஆண்டுத் தயை இருக்கின்றனளா?’ வென்று வினவினன். பின்னர், அவன், ‘யாண்டு யா னிருக் கின்றனனோ? ஆண்டுத் தயை எங்ஙன மிருப்பாள்?’ என்று கூறினன். இருக்க மாட்டா ளென்பது பொரு ளாம். அதற்குப் பிரமாணம் என்னை எனின், பரசு ராமர் பீஷ்மப் பிதாமகற்குப் பூஜிக்கும் யோக்ய முடையோரா யிருந்தும், குரோதம் வந்த சமயத்தில், தயை யிருந்த தில்லை; பரசு ராமரின் எதிரில் யுத்தஞ் செய்தனர். க்ஷத்ரிய ராகிய பீஷ்மப் பிதாமகர் ஒருவர் மாத்திரம் இருந்தும், பரசு ராமரைத் தாழ்வு செய்தனர். இவ்வாறு, வைராக்ய முடைய புருஷனுக்கும், இறை யளவேனும் ஜகத்தின் விஷய மிருக்கு மாயின், அவ் விஷயம் துக்கத்தினைக் கொடுப்பதாகவே யாகின்றது.

பின்னர், மூன்றாவது புருஷனை, 'நீ யார்? எங்கிருக்கின்றாய்? பெயர் யாது?' என்று வினவினன். அப்பொழுது, அவன், 'எனது பெயர் லோப மாம். நான் க்ஷத்திரிய குலத்திற் பிறந்தவன்; தர்ம சாலையி (ஹிருதயத்தி) லிருக்கின்றேன்' என்று கூறினன். அப்பொழுது அவன், 'ஆண்டுக் கீர்த்தி இருக்கின்றனளா?' என்றனன். அதற் கவன், 'யாண்டு யா னிருக்கின்றனனோ, ஆண்டுக் கீர்த்தி யெங்ஙன மிருப்பா' ளென்று கூறினன். இருக்க மாட்டாள் என்பது பொருளாம். அதற்குப் பிரமாண மிருக்கின்றது. சிருங்கி ரிஷி லோபஞ் செய்யுங் காலத்தில் தபசின் கீர்த்தி போய் விட்டது.

பின்னர், நான்காவது புருஷனை, 'நீ யார்? உன் பெயர் யாது?' என்று வினவினன். அக் கால் அவன், 'எனது பெயர் மோக மாம். நான் அந்தப்புர (அந்தக்கரண) த்தி லிருக்கின்றேன்' என்று கூறினன். அப்பொழுது அவன், 'அந்தக் கரணத்தில் திருதி (தைரியம்) இருக்கின்றனளா?' என்று கேட்டனன். அதற் கவன், 'யாண்டு யா னிருக்கின்றனனோ? ஆண்டு எங்ஙனம் திருதி இருப்பாள்' என்று கூறினன். இருக்க மாட்டாள் என்பது பொருளாம். இதற்குப் பிரமாணம் கீதையில், "எப்பொழுது அர்ச்சுனன், தனது பரிவாரங்களைப் பார்த்து, மோஹத்தை அடைந்தனனோ, அப்பொழுது தைர்யம் இருந்ததில்லை" என்று கூறப்பட்டிருக்கின்றது.

இக் காமாதிகள் எங்ஙனம் க்ஷத்ரியர்க ளாவ ரென்று யாவரேனும் சங்கிக்கின், அதற்கு,

**काम एष क्रोध एष रजो गुण समुद्भवः । (३-३७)**

"காம எஷ, குரோத எஷ, ரஜோ குண சமுத்ப்பவ:"(3—37) என்னும் பகவத்கீதை பிரமாண மாம். இதன் பொருள், "இது காமம், இது க்ரோதம், ரஜோ குணத்தி னின்று முண்டா யிற்று" என்ப தாம். இவ் வார்த்தையினைக் கேட்டு, புருஷன் வைராக்கிய ரூப வாளை யுருவிக் கொண்டு, "வைராக்ய முடைய புருஷனுக்குக் காம மெங்ஙன மாம்" என்று விசாரஞ் செய் கின்றான். இவ் வாறாய, விசார வாயிலாகக் காமத்தினை நிஷேதஞ் செய்கின்றான். எங்ஙனம்? சிவன் நேத்திரத்தினின் றாம் அக்நியை உற்பத்தி செய்து, காமனை பஸ்பஞ் செய்தனர். காமத்தினை நிஷேதஞ் செய்து, பின்னர், 'வைராக்ய முடையோ னுக்குக் குரோத மெங்ஙன மா' மென்று விசாரஞ் செய் தனன். பின்னர், விசார வாயிலாகக் குரோதத்தினையும் நிஷே தஞ் செய்தனன். எங்ஙனம்? விஷ்ணுவினைப் பிருகு வானவர் காலா லுதைத்தனர். பின்னரும், விஷ்ணு வானவர், பிருகுவின் காலைப் பிடித்துக் கொண்டு, "ஏ! மகா ராஜாவே! தங்கள் பாதம் மிருதுவா யிருக்கின்றது, எனது ஹிருதயம் கடினமா யிருக்கின்றது. தங்கள் பாதத்திற்குத் துன்பம் உண்டா யிருக்கு" மென்று கூறினர். குரோதத்தினை நிஷேதஞ் செய்து, பின்னர், 'வைராக்ய முடையோனுக்கு லோபம் எங்ஙனமா?' மென்று விசாரஞ் செய்தனன். பின்னர், லோபத்தினையும் நிஷேதஞ் செய்தனன். எங்ஙனம்? நசிகேதா லோபத்தினை விட்டு, தன்து பிதா உத்தாலகர், லோபத்தினால் நசிகேதா வாகிய தன் பொருட்டு, யௌவநப் பசுக்களை வைத்துக் கொண்டு, பிராமணர்களுக்குக் கிழப் பசுவைக் கொடுத்துக் கொண்டிருந்தனர். அதனை நிஷேதஞ் செய்தனர். தான்

யம ராஜாவிற்குக் கொடுக்கப்பட்டனர். யம ராஜனிடத்தும் மூன்று வரங்களை யடைந்து, பிதாவையும் லோபத்தி னின்றும் விடுவித்தனர். பின்னர், இவ் வாறே, மோஹத்தினை நிஷேதஞ் செய்தனன்.

முமுட்சுவால், காமாதிகள் நான்கும் நிஷேதஞ் செய்யப் படுங்கால், ஸ்த்ரீ ஸ்தாநத்தினை யடைந்த, லஜ்ஜை, தயை, கீர்த்தி, திருதிகள், வெளிப்பட்டன. பின்னர், இப் புருஷன், 'வைராக்ய முடையோனுக்கு லஜ்ஜை யெங்ஙனமா' மென்று விசாரஞ் செய்தனன். காரணம்? லஜ்ஜையும் பிரதிபந்தகமா நின்றது. லஜ்ஜையால் கோபிகா ஸ்த்ரீகள் எத் தன்மையை அடைந்தனர்? எங்ஙனம் கோபிகா ஸ்திரீகள் லஜ்ஜையால் கிருஷ்ண பகவா னிடத்தில் செல்லாதிருந்தனர். குப்ஜா வென்பவள் லஜ்ஜையினை விட்டு விட்டனள். இதனல் ஸ்ரீ கிருஷ்ணனை யடைந்து, சுகத்தினை அநுபவித்தனள். பின்னர், 'வைராக்ய முடையோனுக்குத் தயை யெங்ஙனமாம்' என்று விசாரஞ் செய்தனன். தயை செய்யின், ஜடபரத ருக்கு, மான் குட்டியி னிடத்துத் தயை காட்டியதனுல், மான் சரீரத்தினை எடுக்க வேண்டிய தாயிற்ற்றே, அவர் எத் தன்மை யடைந்தனரோ? அத் தன்மையே யுண்டாம். விசுவாவசு வென்னும் பெயரினை யுடைய கந்தர்வ ராஜனது குமாரி யான மதாலசா தயையினை விட்டுச் சுகத்தினை அநுபவித்தனள். பின்னர், 'வைராக்ய முடையோனுக்குக் கீர்த்தி எங்ஙனமாம்' என்று விசாரஞ் செய்தனன். கீர்த்தியை விரும்பின், துரியோ தனன் எத் தன்மையை அடைந்தனனே? அத் தன்மையே யுண்டாம். ஐந்து கிராமங்கள் பாண்டவர்களுக்குக் கொடு வென்று ஸ்ரீ பகவான் துரியோதனனுக்குக் கூறினர். அவன்

அதனை அங்கீகரிக்க வில்லை. நான் இவ் வாறுய பெரிய ராஜாவாக விருந்தும் எங்ஙனம்? அங்கீகரிப்பே னென்றுங் கூறினன். அங்கீகரியாமையினுல், தலையும் இல்லாது போயினன். கீர்த்தியினை விட்டுக் கதரியன் சுகத்தினை அநுபவித்தனன். பின்னர், தைரிய ரூப ஸ்திரியைத் தாரணஞ் செய்து, துருவன், சிசுபாலன், தைரியத்தினைத் தாரணஞ் செய்து, ஆத்ம சொரூபத்தினை யடைந்தது போன் ருயினன்.

பின்னர், அப் புருஷன், திருதியைத் தாரணஞ் செய்து, விசார ரூப கூந்தாலத்தினைக் கொண்டு, சங்காத ரூப கோயிலைப் பிளக்க ஆரம்பித்தனன். முதலில் 'திருசியம் ஜட மாம். அநித்தியமா' மென்று விசாரஞ் செய்து, துவார ஸ்தாந மான ஸ்தூல சரீரத்தினை நிஷேதஞ் செய்தனன். இவ் வாறே, 'இந்த்ரியம், பிராணன் முதலியனவும் பஞ்ச பூதங்களின் விகார மாம். ஜட மாம், திருசிய மாம், நான் இவைகளை யறிவோன்.' என்னும் விசாரத்தினுல், அக்நி சாலா ஸ்தாந மான பிராணனை நிஷேதஞ் செய்தனன். பின்னர், விசார ரூப மான கூந்தாலத்தினைக் கொண்டு, அந்தப் புர ஸ்தாநத்தினை யடைந்த அந்தக் கரணத்தினைப் பார்க்குங்கால், இஃதும் 'பஞ்ச மஹா பூதங்களின் விகார மாம். ஜட மாம். நான் அந்தக் கரண மன்றுவன்.' என் றறிந்து, இதனுல் அந்தக் கரணத்தினையும் நிஷேதஞ் செய்தனன்.

**அப் பொழுது வாதி ஆ சங்கை செய்கின்றுன்:—** அந்தக் கரணம் பஞ்ச பூதங்களின் விகாரம் எங்ஙன மாம்? பஞ்ச பூதங்களின், சப்த ஸ்பர்ச ரூப ரச கந்த மென்னும் ஐந்து குணங்களும் பிந்ந பிந்நங்க ளாம். இவ் வைந்து குணங்

களுள், ஒரு குணமும் அந்தக் கரணத்தில் இல்லை. இவ் வைந்து குணங்களின் விலக்ஷண மாகச், சங்கல்பம் நிச்சயம் கர்வம் ஸ்மரணம் என்னும் குணங்கள் அந்தக் கரணத்தில் இருக்கின்றன. ஆதலின், 'அந்தக் கரணம் பஞ்ச மஹா பூதங்களின் விகாரம்' என்று எங்ஙனம்? கூறினீர். நீர் இவ் வாறு கூறுதல் பொருந்தாது.

**அப் போது சித்தாந்தி கூறுகின்றார்.** தமையனே! கேட்பா யாக. பஞ்ச மஹா பூதங்களின் சமஷ்டி சத்துவ குண அம்சத்தி னின்றும் அந்தக் கரண முண்டாயிற்று. இதனால், விலக்ஷண குணம் அடையப்பட்டது.

**பிரசினம்:—** இதில் பிரமாணம் யாது?

**உத்தரம்:—** இதில் யுக்தி பிரமாண மாம். எங்ஙனம்? 'வெற்றிலை, சுண்ணாம்பு, கத்தைக் காம்பு, பாக்குப், புகையிலை' என்னும் ஐந்தும், வெவ் வேறான ஐந்து ரூபங்க ளுடையன வாம். சிவப்பு ரூபம் எதற்கும் இன்றாம். பின்னரோ, ஐந்தையும் சேர்க்கும் காலத்து, எல்லாவற்றிற்கும் ஒரு சிவப்பு ரூபம் உண்டாகின்றது. இவ் வாறே, தார்ஷ்டாந்தத்தினு முணர்க.

அப் புருஷன், அந்தப் புர ஸ்தான மாய அந்தக் கரணத் தினை நிஷேதஞ் செய்து, பின்னர், விசார ரூப கூந்தாலத்தினால், புத்தி ரூப கல்லை நிஷேதஞ் செய்தனன். அப் பொழுது, புருஷ ஸ்தான மாகிய புத்தியி னின்றும் பரமாகப் பரமாத்மா வெளிப்பட்டது. அது பகவத் கீதையில்,

**"यो वुद्धेः परतस्तु सः" ३—४२ ॥**

"யோ புத்தே: பரதஸ் து ச:" (3—42) என்று கூறப் பட்டிருக்கின்றது. இதன் பொருள்:— எது புத்தியி னின்றும் பரமோ, அஃதாவது புத்திக்குச் சாக்ஷியோ, அது பரமாத்மா வாம். அப் பொழுது, புத்தியில் பிரதிபிம்பித்திருந்த சிதாபாசன், தனது பிம்பத்தில் லய மாய் விட்டனன். அவன் லய மாகும் போது, புருஷனுக்குத் திரவிய ஸ்தாந மாய சொருபத்தின் இச்சை நிவிர்த்தி யாயிற்று; தனது சொரு பத்தில் ஸ்திர மாய் விட்டனன். திருதி ரூப ஸ்த்ரீயின் சங்கமும், கிழவி ஸ்தாநப் பிராரப்தத்தினை யடைந்து விட்டது. பின்னர், வெளிப்பட்ட நான்கு ஸ்த்ரீகள் யாவ ரெனில், கூறுகின்றேன். அந்த ஸ்த்ரீகள், மைத்ரீ, கருணை, முதிதை, உபேட்சை என்னும் நான்கினையும் தாரணஞ் செய்தவர்கள்.

**பிரசிநம்:—** மைத்ரீ முதலியவற்றிற்குப் பிரமாணம் யாது?

**உத்தரம்:—** இவற்றிற்கு,

**"मैत्री करुणा मुदितोपेक्षाणां सुख दुःख पुण्यापुण्य विषयाणां भावनातश्चित्तप्रसादनं" १—३३ ॥**

"மைத்ரீ கருணா முதிதோபேட்சாணும் சுக துக்க புண்யா புண்ய விஷயாணும் பாவநாத: சித்தப்பிரசாதநம்." (1-33) என்னும் பதஞ்சலியின் சூத்திரம் பிரமாண மாம். இதன் பொருள்:— சுகியா யுள்ள சாது புருஷனிடத்தில், மித்ரத் தன்மையும், துக்கி ஜநங்க ளிடத்தில், கிருபையும், புண்யாத் மாக்களிடத்துப், பிரீதியும், பாபிக ளிடத்தில், தியாகமும்,

என்னும் பாவனையினல் சித்தம் பிரசந்ந மாகின்றது. (ஏகாக்ரத் தன்மையினை யடைகின்றது.) வைராக்ய ரூப வாளும், விசார ரூப கூந்தாலமுங் கொண்டு இருக்கின்றன னென்னும் வார்த்தை கூறப்பட்டது. அவனை ஆரக்தன் என்றும், விரக்தன் என்றும் கூறுகின்றனர். அந்த இவனை வீத ராக னென்று கூறுகின்றனர்.

**1. நான்கு ஸ்த்ரீகளின் த்ருஷ்டாந்தத்தில், யதார்த்த ஞாநத்தினை அடைதற்கு, முதல் யுக்தி முற்றுப் பெற்றது.**

## 2. ஜீவந் முத்தி விதேக முத்திகளை நிர்ணயிக்கும் யுக்தி.

**பிரசிநம்:—** சுழுப்தியிலும், ஞாநியின் அவஸ்தையிலும் பேதம் என்னை? நீ எதனை ஞாந மென்று அங்கீகரிக்கின்றாய்? என்று வாதி வினவினன்.

**உத்தரம்:—** நான் ஜகத்தின் * அத்தியந்தாபாவத்தினை ஞாந மென்று அங்கிகரிக்கின்றேன்.

---

* அத்யந்தாபாவம் — "திரை காலிக சம்சர்க்காவச்சிந்ந ப்ரதியோகியினுடைய, அத்தியந்தாபாவம்" என்பதன் பொருள், திரை காலிக - இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் - என்னும் காலங்களில், (நித்திய) சம்சர்க்கம் - சம்பந்தத்தினல், அவச்சிந்ந மான வஸ்துவின் அபாவம்-அத்தியந்தாபாவ மாம். எங்ஙனம்? "பூதலத்தில் குடம் இல்லை" என்பதில், மூன்று காலத்திலும் சம்சர்க்க (சம்பந்த) த்தால், அவச்சிந்ந மான குடத்தின் அபாவத்தோடு கூடியது பூதல மாமோ, அங்ஙனமே மூன்று காலத்திலும் ஜகத்தின் அத்தியந்தாபாவம் பிரஹ்ம மாம். அந்த ஞாநம்.

**பிரசிநம்:—** ஜகத்தின் அபாவமோ? சுழுத்தியிலு மிருக்கின்றது.

**உத்தரம்:—** சுழுத்தியில், ஜகத்தின் அத்தியந்தாபாவ முண்டாவ தின்று, காரியத்தின் அபாவ முண்டாகின்றது; காரணத்தி னபாவ முண்டாவ தில்லை. அபாவம் போலும் சில விடத்து சுழுத்தி உண்டாகின்றது.

**பிரசிநம்:—** யாண்டு உண்டாகின்றது?

**உத்தரம்:—** மூர்ச்சை பிரளயங்களில் உண்டாகின்றது. இவ் வளவு ஜகத்தின் அபாவம் உண்டாவது அநித்தியத்தினுலாம், நித்தியத்தினு லுண்டாவ தில்லை. ஆதலின், அநித்திய அபாவ முண்டாகின்றது, நித்திய மாக உண்டாவ தில்லை. ஏனெனின், இந்த ஜகத்தின் அபாவம் உண்டாய்ப், பின்னர் உற்பத்தியும் ஆகின்றது. ஆதலின், அத்தியந்தாபாவம் உண்டாவ தில்லை. ஆகையால், நான் பாவ ரூப அபாவமே சித்தஞ் செய்தேன். இதன் தாத்பர்யம் இஃதாம். ஞாநியின் திருஷ்டியில், ஜகத்தின் அபாவ மிருக்கின்றது, அஞ்ஞாநியின் திருஷ்டியில், ஜகத்தின் பாவ மிருக்கின்றது. எங்ஙனம்? ரஜ்ஜுவின் ரூபத்தினை யறியாதவனுக்குச் சர்ப்பத்தின் பாவ மிருக்கின்றதோ. (அங்ஙனமே யாம்.)

**பிரசிநம்:—** இதிற் பிரமாணம் யாது?

**உத்தரம்:—** (அபரோக்ஷாநுபூதி) ஸ்மிருதி பிரமாண மாம்.

**"यथैव द्विविधा रज्जुर्ज्ञानिनोऽज्ञानिनो ह्ययम्" (५८)**

"யதைவ த்விவிதா ரஜ்ஜுர் ஞாநிநோ ஞாநிநோஹ்யயம்" (58)

இதன் பொருள்:— ஞாநி, அஞ்ஞாநிகட்கு இந்தக் கயிறே இரண்டு பிரகார மாகத் தோற்றுகின்றது.



**பிரசிநம்:—** ஸ்மிருதியில்,

**"क्रीडेयं मतियुक्तस्य जाग्रत्यपि सुषुप्तिवत् ।
चेष्टते बालवज्ज्ञानी ब्रह्मानंदेन तोषितः ॥"**

"க்ரீடேயம் மதியுக்தஸ்ய ஜாக்ரத்யபி சுஷுப்திவத்,
சேஷ்டதே பாலவஞ்ஞாநி பிரமாநந்தேந தோஷித:"

இதன் பொருள்:— ஜாக்ர அவஸ்தையில் நிச்சயமாக, சுழுத்தி போன்று ஞாநியின் புத்தி யிருக்கின்றது. உன்மத்தன் போன்று கிரீடிக்கின்றான். ஞாநி பிரஹ்மாநந்தத்தினால் திருப்த னாய்ப் பாலனைப் போன்று சேஷ்டிக்கின்றான். என்று கூறப்பட்டிருக்கின்ற தெனின்.

**உத்தரம்:—** இந்த ஸ்மிருதியின் பொருளை நீ உணர்ந்தா யில்லை. ஜாக்ர அவஸ்தையில் சுழுப்தி கூறப்பட வில்லை. சுழுப்தி போன்று கூறப்பட்டிருக்கின்றது. சுழுத்தியில் மித்யா பாசம் * (பொய் விளக்கம்) இருப்ப தில்லை. ஞாநியி னவஸ்தையில் மித்யா பாச மிருக்கின்றது. சுழுப்தி போன்று ஞாநியி னவஸ்தை யிருக்கு மாயின், அவன் எங்ஙனம் உபதேசஞ் செய்வன்?

**பிரசிநம்:—** நான் மித்யா பாச மிருப்பதற்கு ஞாந மென்று அங்கிகரிப்ப தில்லை. எதில் மித்யா பாச மிருப்ப தில்லையோ, அதனை ஞாந மென்று அங்கிகரிக்கின்றேன்.

---

* மித்யா பாசம் - நேத்திர தோஷம் முதலிய காரணங் களால், சத்தியத்தின் மீது அசத்தியத்தின் தோற்ற மாம். எங் ஙனம்? "கயிற்றின் மீது இது பாம்பு" என்று தோற்றுவது. அல்லது - சூரிய கிரணங்களை யுடைய மணல் ரூப பூமியில், ஜலத் தின் பிராந்தி யுண்டாவது.

**உத்தரம்:—** மித்யா பாச மின்ருயின், ஞாநி ஜீவந் முக்தன் ஆகான்.

**பிரசிநம்:—** ஜீவந் முக்தி யின்ருயினும், விதேக முக்தி யோ வுண்டாம்?

**உத்தரம்:—** ஜீவந் முக்தியே வுண்டாகாதபோது, விதேக முக்தி எங்ஙனெ? முண்டாம். ஏனெனின், ஞாநி, ஜீவந் முக்தனுய் உபதேசஞ் செய்கின்ருன், அவனே விதேக முக்தி யடைகின்ருன். இதனுல், ஜீவந் முக்தன் ஆகா திருக்கின், உலகி லுள்ளோர்க்குக் கல்யாணம் எங்ஙன? முண்டாம்.

**பிரசிநம்:—** உலகத்தி லுள்ளவர்களது கல்யாணத்தினுல் எனக்கு யாது பிரயோஜநம்? தனது கல்யாணமே உண்டாதல் வேண்டும்.

**உத்தரம்:—** உனது கல்யாணம் எங்ஙன? முண்டாயிற்று. ஏனெனின், உனது குருவோ விதேக முக்தி யடைந்தனர். உனக்கு யார்? உபதேசஞ் செய்தனர். இதனுல், விதேக முக்தியும் பொருந்தாது. எவனுக்கு ஜீவந் முக்தி உண்டாகின்றதோ, அவனுக்கு விதேஹ முக்தி யுண்டாகின்றது.

**பிரசிநம்:—** நான் மித்யா பாசத்தினையே ஞாநமென்று அங்கீகரிக்கின்றேன். மித்யா பாச முண்டாவதனையே முக்தி என்று அங்கீகரிக்கின்றேன். இஃதின்றி அங்கீகரிப்ப தில்லை.

**உத்தரம்:—** இப்போது விதேஹ முக்தி பொருந்தாது. விதேஹ முக்தி யின்ருயின், நிர்விகல்ப (சம்சயம் இன்றிய) சித்தாந்த முண்டாவ தில்லை.

**பிரசிநம்:—** வியவஸ்தை எவ்வாறு பொருந்துகின்றது? நீயே கூறுவாயாக.

**உத்தரம்:—** நான்கு * ஸாதநங்களோடு கூடிய முமுக்ஷு, குருவின் சமீபத்திற் சென்று, சிரவண மநந நிதித்தியாசநங்கள் செய்வதனால், சாக்ஷாத்காரம் உண்டாகின்றது. சாக்ஷாத்காரம் உண்டாயின், ஜீவந் முக்தி உண்டாகின்றது. அந்த ஜீவந் முக்தனே விதேஹ முக்த னாகின்றான். இதனை லிவ்வர்த்தம் வெளி யாயிற்று. ஜாக்ரத்தில், சுழுத்தி போன்று, ஞாநியின் அவஸ்தை யாம். சுழுத்தியே ஞாநியின் அவஸ்தை யன்றாம். பின்னர், ஞாநியின் தசை யெங்ஙன மெனின், உன்மத்தன் கிரீடை செய்வது போன்று, ஞாநி வியவகாரஞ் செய்கின்றான்; 'என் செய்கின்றோ' மென்று இவனுக்கு ஒரு ஞாபகமு மில்லை. ஒரு ஞாபகமும் இல்லாதது சுழுத்தி யாம், கிரீடை செய்வது மித்யா பாச மாம். சுழுத்தியில், மித்யா பாச முண்டாவ தில்லை. இதனால், ஜாக்ரத்திலேயே

---

* சாதநங்கள் — 1. நித்திய அநித்திய வஸ்து விவேகம் - நித்திய வஸ்து - பிரஹ்மம், அநித்திய வஸ்து - பிரஹ்மத்திற்கு அந்நிய மான ஜகத் - இவற்றின் - விசாரம்.

2. இஹ அமுத்ர அர்த்த பல போக விராகம் - இஹ அர்த்தம் - மாலை, சந்தநம் முதலியன, அமுத்ர அர்த்தம் - அமிருதம் முதலியன - இவற்றின் - பல ரூப மான போகத்தில், இச்சை அற்றிருத்தல்.

3. சமாதி ஷட் சம்பத்தி - சமம் தமம் உபரதி திதிக்ஷை சமாதாநம் சிரத்தைக ளாம்.

4. முமுக்ஷுத்வம் - மோக்ஷம் வேண்டும் என்னும் இச்சை. இவை நான்கு சாதங்க ளாம்.

சுழுத்தி போன்று பிரவிர்த்திக்கின்ருன். பின்னர், ஞானியின் அவஸ்தை யெங்ஙனமா மெனின், ஞானி பாலகனைப் போன்று சேட்டை செய்கின்ருன். உன்மத்தன் திருஷ்டாந்தம் சூக்ஷும மாம். பாலகன் திருஷ்டாந்தம் ஸ்தூல மாம். ஏனெனின், மத முடையோனது உள்ளி லிருக்கும் இச்சை யின் சமாச்சாரம் ஒருவருக்கும் தோற்றுவ தில்லை. பாலக னுக்குப் பசி யுண்டாயின், அழுகை கேட்கப்படுகின்றது, பார்க்கப்படுவ தில்லை. ஞானி பிரஹ்மாநந்தத்தினல் திருப்தனு யிருக்கின்ருன்.

**பிரசிநம்:—** இதனு லிது பிரதீதி யாயிற்று. ஞானியின் அவஸ்தை ஜாக்ரம் போன்ற தாம். ஏனெனின், ஜாக்ரத்தில், சொப்பந சுழுத்திகளின் மித்தியா பாச முண்டாகின்றது. சுழுத்தியில், ஜாக்ர சொப்பநங்களின் மித்தியா பாச முண்டா கின்ற தில்லை.

**உத்தரம்:—** இவ் வாறு சம்மதங் கூறுக. ஜாக்ரம் தீபகம் போன்ற தாம். ஞானியின் அவஸ்தை சூரியன் போன்ற தாம். ஏனெனின், தீபகம் சிலவற்றினை விளக்குகின்றது, தனது ஞாந மில்லாதது. சூரியன் எல்லாவற்றையும் விளக்கு கின்றனன், தன்னையும் அறிகின்றனன். இதனுல், ஞானி யின் தசை ஜாக்ரம் போன்று மில்லை.

**பிரசிநம்:—** சூரியன் போன்று ஞாநத்தினைக் கூறின், அந்த ஞாநம் அந்தக் கரணத்திற் குண்டாகின்றது. அவ் வந்தக் கரணம் அநித்திய மாம். இதனுல், ஞானியும், ஞானி யின் துர்யாவஸ்தையும் அநித்திய மாயிற்று.

**உத்தரம்:**— நான் துர்யாவஸ்தையினைச் சுத்த மாக அங்கி கரிப்ப தில்லை. துர்யாதிதத்தினைச் சுத்த மாக அங்கிகரிக் கின்றேன்.

**அதன்கண் ஒரு திருஷ்டாந்தங் கூறுகின்றேன்.** எங்ஙனம்? ஒரு ராஜாவின் முன்னர், ஒரு வேசி நிர்த்தநஞ் செய்தனள். பின்னர், நட்டுவன் அபிநயஞ் செய்தான். அதனையும் அரசன் பார்த்தான். இவ் வளவில் சூறைக் காற் றடித்தது. அதனுல் தீபம் அணைந்துவிட்டது. எல்லோ ருடைய விளையாட்டும் கெட்டுவிட்டது. அவ் வெல்லோரது கூத்தினையும் அரசன் பார்த்தான், அவ் வெல்லோரிலும் தன்னை வேருக உணர்ந் தனன்.

**தார்ஷ்டாந்தம் கூறப்படுகின்றது.** அது போலவே, ராஜா ருப சைதந்யம், வேசி—நட்டுவன்—சூறைக் காற்று ருப— ஜாக்ர சொப்பந சுழுத்திகளை விளக்கிற்று. தான் ஞாந சொருபமா யிருக்கின்றது.

**பிரசிநம்:**—நீரோ, “நான் துரியத்தினைச் சுத்த மாக அங்கீ கரிப்ப தில்லை” என்று கூறினீர். கூறுவதோ, துரியத்தினைச் சுத்த மாகச் செய்வ தாகின்றது.

**உத்தரம்:**— நான் துரியத்தினை ஞாந சொருப மாகவே அறிகின்றேன். ஆயினும், இதனை யறித லென்பது, சாக்ஷித் தன்மை யாம். அதுவே மலிநத் தன்மை யாம்.

**பிரசிநம்:**— பின்னர், எதனைச் சுத்த மாக அங்கிகரிக் கின்றீர்.

**உத்தரம்:—** துரியாதீதத்தினைச் சுத்த மாக அங்கிகரிக்கின்றேன்.

**பிரசினம்:—** இஃதே சுத்தமா? வேறு இருக்கின்றதா?

**உத்தரம்:—** அந்த விசார வாயி லாக, ஜாக்ர சொப்ந சுழுத்திகளின் அபாவத்தின, லிஃதே துரியாதீத மாகின்றது.

**பிரசினம்:—** விசாரமோ அந்தக் கரணத்திற் குண்டாகின்றது. அவ் வந்தக் கரணம் அநித்திய மாம். இதனை நீர் முன்னரே நிஷேதஞ் செய்து வந்தீர்.

**உத்தரம்:—** அநித்தியத்தினல், நித்தியத்தி னடைவு உண்டாகின்றது.

**பிரசினம்:—** எவ் வாறு உண்டாகின்றது? அநித்தியத்தில் ஒரு போதும் நித்தியத்தின் பிரதீதி உண்டாகிற தில்லை.

**உத்தரம்:—** எங்ஙனம்? தர்ப்பணம் அநித்திய மாம். அதனைப் பார்த்தலினல், நித்ய முகத்தின் பிரதீதி உண்டாகின்றது.

**பிரசினம்:—** எங்ஙனம்? தர்ப்பணத்தில் பிரதிபிம்பம் பார்க்கப்படுகின்றது, அது மித்தை யாம். அஃதே போல், புத்திப் பிரதிபிம்ப சைதந்யமும் மித்தை யாம். இதனல், சத்திய சொரூபத்தின் பிராப்தி எவ் வாறு உண்டாயிற்று?

**உத்தரம்:—** பொய்யாகவே இருக்கின்றது. ஆனல், பிரதிபிம்பத்தினைப் பார்த்தலினல், பிம்பத்தின் பிரதீதி உண்டாகின்றது. எங்ஙனம்? நேத்திரம், தர்ப்பணத்தில் தனது மித்தியாப் பிரதிபிம்பத்தினைப் பார்த்தலினல், தனது சத்தியப்

பிரதீதி செய்கின்றது. மற்றும், ஒரு புருஷன் நேத்ரத்தில் விகாரம் கூறுவா னுயின், பிரதீதியில் வருவ தில்லை என்பது சம்சய மின்றிய தாம்.

**பிரசிநம்:—** இதில் பிரமாணம் என்னை எனின்.

**உத்தரம்:—**ஸ்மிருதி ப்ரமாண மாம், அதனைக் கூறுவாம்.

**"यथा नेत्रं दर्पणे स्वकं रूपं स्वयमेव लक्षयति ।
तथा आत्मापि शुद्धबुद्धौ स्वकमखंड सच्चिदानंद स्वरूपं स्वयमेव लक्षयति" ॥**

"யதா நேத்ரம் தர்ப்பணே ஸ்வகம் ரூபம் ஸ்வயமேவ லக்ஷயதி, ததா ஆத்மாபி சுத்த புத்தௌ ஸ்வக மகண்ட சச்சிதாநந்த சொரூபம் ஸ்வயமேவ லக்ஷயதி"

இதன் பொருள்:—எங்ஙனம்? நேத்திரம் தர்ப்பணத்தில், தனது ரூபத்தைத் தானே அறிகின்றதோ, அங்ஙனமே, ஆத்மாவும் சுத்த புத்தியில், தனது அகண்ட சச்சிதாநந்த ஸ்வரூபத் தினைத் தானே அறிகின்றது.

**பிரசிநம்:—** புத்தி யிருக்கின், துவைதப் பிராப்தி யுண்டாம்.

**உத்தரம்:—** அத்வைத சித்தி யுண்டாயிற்று. காரணம்? ஞாநம், புத்தியாதிகளைப் பாதஞ் செய் துண்டாகின்றது.

**பிரசிநம்:—** நீர், சுவ கபோல கற்பித மாகக் கூறுகின்றீர். இவ் வாறுய பிரமாணம் யாண் டுளது?

**உத்தரம்:—** அஸ்தாமலகாது வசநம் பிரமாண மாம், அதனையே கூறுகின்றேன்.

**"यथा दर्पणाभाव आभासहानौ मुखं विद्यते कल्पना हीनमेकं। तथा धी वियोगे निराभासको यः स नित्योपलब्धिः स्वरूपो हमात्मा" ४ ॥**

"யதா தர்ப்பணுபாவ ஆபாச ஹாநௌ முகம் வித்யதே கல்பநா ஹீந மேகம், ததா தீ வியோகே நிராபாசகோ ய: ச நித்யோபலப்தி: ஸ்வரூபோஹமாத்மா" (4)

இதன் பொருள்:— எங்ஙனம்? தர்ப்பணத்தி னபாவ முண்டாவதில், ஆபாசத்தின் நிவிர்த்தி யுண்டாவதனுல், மூன்ருவது கல்பனை யின்றி ஒரு முக மாத்திர மிருக்கின்றதோ, அங்ஙனமே, புத்தியி னபாவத்தினுல் மூன்ருவது ஆபாச ரகித நித்யப் பிராப்தி சோரூப நான் ஆத்மாவா யிருக்கின்றேன்.

நான் இதனை ஞாந மென்று அங்கீகரிக்கின்றேன். இஃதே எல்லா ஞாநிகளின் அநுபவமு மாம்.

2. ஜீவந் முக்தி விதேக முக்திகளை
நிர்ணயிக்கும் யுக்தி முற்றுப் பெற்றது.

---

**3. புத்தியின் நிர்ணயத்தில் தத்துவ ஞாந முண்டாவதற்கு யுக்தி.**

இப் பொழுது, புத்தியின் நிர்ணயத்தில், தத்துவ ஞாந முண்டாவதற்கு மூன்ருவது யுக்தி கூறப்படுகின்றது.

**சித்தாந்தி** கூறுகின்றுர். ஜலத்தில் தரங்கம் போன்று, ஆத்மாவில் ஜகத் விளங்குகின்றது.

வாதி சங்கிக்கின்ருன். ஜலத்தில் அவகாச முண்டாம், அதனினின்றும் தரங்கம் விளங்கும். ஏனெனில், ஜலம் ஏக தேசத்தில் விளங்குகின்றது, ஆத்மா ஸர்வ வியாபி யாம். ஆத்மாவில், அவகாசம் எங்கிருக்கின்றது? எதில் ஜகத்து விளங்கும். அவகாச மிருக்கு மாயின், ஆத்மாவும், ஏக தேச அவச்சின்ன மாம்; சர்வ வியாபி யன்ரும்.

**உத்தரம்:**— இந்தத் திருஷ்டாந்தம் முமுக்ஷுவின் திருஷ்டி நிலைத்தற் பொருட்டுக், கொடுக்கப்பட்ட தாம். தரங்கத்தின் திருஷ்டாந்தத்தினுல் முமுக்ஷுவின் திருஷ்டி ஸ்திர மாம். எங்ஙன மெனின், எங்ஙனம்? இரண்டு புருஷர்கள் ஜலத்தின் சமீபத்தில் உட்கார்ந்திருந்தனர். ஒரு புருஷனுடைய திருஷ்டிக்கு ஜலம் மாத்திரம் விளங்கிற்று, தரங்காதிகள் விளங்க வில்லை. ஒரு புருஷ னுடைய திருஷ்டிக்குத் தரங்கங்களே விளங்கின, ஜலம் விளங்க வில்லையோ, இவ் வாறு, ஒரு புருஷ ரூப ஞாநியின் திருஷ்டியில், ஜல ஸ்தாநமா யுள்ள ஆத்மா மாத்திரமே விளங்கிற்று, தரங்க ரூப ஜகத்து விளங்க வில்லை. வேறு அஞ்ஞாநி புருஷன் திருஷ்டியில், தரங்க ஸ்தாந மாகிய ஜகத்தே விளங்கிற்று, ஆத்மா விளங்க வில்லை. இதனுல், ஜிஞ்ஞாசுக்கு, "ஜகத்து தரங்கம் போன்ற தாம், சத்திய மன்று" மென்று கூறப்பட்ட தாம்.

**பிரசிநம்:**— நீரோ, தரங்கம் சத்திய மன் றென்று கூறுகின்றீர். தரங்கமோ, பிரத்தியட்ச மாக விளங்குகின்றது.

**உத்தரம்:**—நீ இந்த எனது துப்பட்டாவினைக் கொண்டு, "ஜலத்தினின்றும் தரங்கங்களைப் பிடித்துக் கொண்டு வா!"

என்று கூறினன். அப் பொழுது, அப் புருஷன், துப்பட்டா வினை வாங்கிக் கொண்டு சென்று, எல்லா ஜலத்திலும் சுற்றித் (தரங்கங்களைப் பிடிக்கப் பார்த்தனன்.) ஆனால், ஒரு தரங்க மும் அகப்பட வில்லை. அப் பொழுது அவன், "மகா ராஜாவே! தரங்க மொன்றும், கையி லகப்பட வில்லை. ஜல மாத்திரமே யிருக்கின்றது" என்று கூறினன். அப் பொழுது புருஷன், "உண்மையே; நீயே பார். நீ தரங்கம் சத்திய மென்று கூறினாய். அஃ தெங்குப் போயிற்" றென்று கூறினன். இதனால், ஜல ரூப சிதாநந்தமே சத்திய மாம். தரங்க ரூப ஜகத் கிஞ்சித் மாத்திரமும் சத்திய மன்றாம்.

**பிரசிநம்:—** துப்பட்டா ஸ்தாந மாக யாது கொடுக்கப் பட்டது?

**உத்தரம்:—** குருவால், தனது விசா ராத்மக திருஷ்டி ரூப துப்பட்டா கொடுக்கப்பட்டது. அவ் விசார ரூப திருஷ்டியினால், தரங்க ரூப ஜகத் ஒன்றும் அகப்பட வில்லை, அஸ்தி பாதிப் பிரியத் தன்மை மாத்ரமே கிடைத்தது.

**பிரசிநம்:—** இவ் வாறு விசாரம் எவ் வாற்றால் உண்டா கின்றது?

**உத்தரம்:—** சுத்த புத்தியினா லுண்டாகின்றது.

**பிரசிநம்:—** அந்தச் சுத்த புத்தி எவ் வாறு இருக் கின்றது?

**உத்தரம்:—** சுத்த புத்தி சூக்ஷ்மத்தினும், சூக்ஷ்ம மாய், மகத்தினு மகத்தாய் இருக்கின்றது.





**பிரசிநம்:**— ஒரு வஸ்துவில், "சூக்ஷும மகத்" தென்று கூறப்பட்ட இரண்டு பொருள் எங்ஙனம் பொருந்தும்? எங்ஙனம் பிதாவினிடத்தில், 'சிறுமை பெருமை' என்னும் இரண்டு விகற்ப மெவ்வா றுண்டாம்?

**உத்தரம்:**—எங்ஙனம்? ஆகாசத்தி னேக தேசத்தில் (இருக்கும்) சூரியன் சூக்ஷுமத்தில் சூக்ஷுமமும், மகத்தினு மகத்தாவன். ஏனெனின், சர்வ வியாபி யாய சூரியன், எல்லா விடத்திலும் பிரதிபிம்பித்திருக்கின்ருன். எங்ஙனம்? சரீரத்தின் ஏக தேசத்தில் நேத்திர மிருக்கின்றதோ, நேத்திரத்தி னேக தேசத்தில் கரு விழி யிருக்கின்றதோ, கரு விழியி னேக தேசத்தில் தில மிருக்கின்றதோ, திலத்தி னேக தேசத்தில் பிரகாச மிருக்கின்றதோ, அந்தப் பிரகாசம், சூக்ஷ்மத்தினும் சூக்ஷும மாம்; மகத்தினு மகத் தாம். எங்ஙன மெனின்? எல்லாத் துருவாதி (லோகங், நக்ஷத்ரங்) களும், அதனல், அறியப்படுகின்றது. யாண்டுத் திருஷ்டி செல்லுகின்றதோ, ஆண்டே நேத்திரம் வியாபக மாகிவிடுகின்றது. பிரகாசமே வியாபக மாம். இவ் வாறே, புத்தி அதிசூக்ஷுமத்தினும் சூக்ஷும மாம். ஒன்றும் தோற்றுவ தில்லை. எத்தனை பேர் இதில் வாதஞ் செய்கின்றனர். சிலர், புத்தி சாவயவ மென்கின்றனர். சிலர், நிரவயவ மென்கின்றனர். மகத்தினு மகத் தாம். எல்லாவற்றினையும் அநுபவஞ் செய்கின்றது.

**பிரசிநம்:**— புத்தி சாவயவமா? நிரவயவமா? என்பதனை நிர்ணயஞ் செய்து, நீரே கூறுவீராக.

**உத்தரம்:**— புத்தி சாவயவ மாம்.

**பிரசிநம்:—** 'சாவயவ' மென்று எதனுல் நிச்சயஞ் செய்தீர்? சொரூபத்தாஞே ஒன்றும் பார்க்கப்படுவ தில்லே.

**உத்தரம்:—** வாதி கேட்பாயாக, புத்தி சாவயவ மன்ருயின், யோகி எங் கிருந்து பார்க்கின்ருன். இதனுல், சாவயவமாம்.

**பிரசிநம்:—** புத்தி இவ் வாறு அதிசூக்ஷ்ம மாம். நிரவயவ சமாந மாயின், பிரதிபிம்பத்தினே எங்ஙனம் கிரகணஞ் செய்யும்?

**உத்தரம்:—** வாய்வு சுகந்தத்தினே கிரகணஞ் செய்வது போன்று, பிரதிபிம்பத்தினேக் கிரகணஞ் செய்கின்றது.

**பிரசிநம்:—** இவ் வாருய புத்தி, சுயமே உண்டாகின்றதா? செய்யப்படுவதனு லுண்டாகின்றதா?

**உத்தரம்:—** விசார ரூப புத்தி செய்யப்படுவதனு லுண்டாகின்றது, சுயமாக உண்டாகின்ற தில்லே. இதனேச் செய்வதற்கு இரண்டு யுக்தி இருக்கின்றது, ஒன்று சீக்கிர மாகவே செய்வதற் காம். மற் ருென்று, நீ ணுளி லுண்டாவதற் காம்.

**பிரசிநம்:—** இதன்கண் ஒரு திருஷ்டாந்தங் கூறுவீராக?

**உத்தரம்:—** இதன்கண் இத் திருஷ்டாந்த மிருக்கின்றது. எங்ஙனம்? இரண்டு புருஷர்கட்கு வேறு வேறு பங்களாச் செய்வதற்கு இச்சை உண்டாயிற்று. ஒரு புருஷன், அநேக வேலேக்காரரை ஏற்படுத்தினன். ஒரு புருஷன் ஒரு வேலேக்

காரனையே நியமித்தனன். அநேக வேலைக்காரரை ஏற்படுத்தின புருஷனது பங்களாச் சீக்கிரமாகவே முடிவு பெற்றது. ஒரு வேலைக்காரனை ஏற்படுத்திய புருஷனது பங்களா நீ ணாளில் முடிவு பெற்றது.

இப் பொழுது தார்ஷ்டாந்தங் கூறப்படுகின்றது. ஒரு முமுக்ஷு புருஷன், புத்தி ரூப பங்களாவினைச் செய்தற் பொருட்டு, சத் சங்க ரூப அநேக வேலைக்காரரை நியமித்தனன். அவனது புத்தி ரூப பங்களாச் சீக்கிர மாகவே முடிவு பெற்றது. வே றொரு முமுக்ஷு புருஷன், யோக ரூப ஒரே வேலைக்காரனைப், புத்தி ரூப பங்களாச் செய்தற் பொருட்டு நியமித்தனன். அவனது புத்தி ரூப பங்களா, மிக நீ ணாளில் முடிவு பெற்றது.

**பிரசிநம்:—** உண்மையே; ஆனால், பங்களாச் செய்வதில் (வாள்) அதிகாரம் வேண்டும். வேலைக்கார ஸ்தாநத்தி லிருக்கும் முமுக்ஷுவிற்கு, ஈண்டு அதிகார (வாள்) ஸ்தாநம் யாது? அவனோ, விரக்த னாகவே இருக்கின்றான்.

**உத்தரம்:—** ஈண்டு, சுருதி ஸ்மிருதி யுக்தி அநுபவ திருஷ்டாந்த தார்ஷ்டாந்திக ரூப அதிகாரங்க (வா) ளால் புத்தி ரூப பங்களாச் செய்யப்பட்டது.

**பிரசிநம்:—** இவ் வாறாய புத்தியினால் யாது பிரயோஜநஞ் சித்தித்தது? அல்லது, (வெறும்) வார்த்தையானையே பண்ணப்பட்டதா?

**உத்தரம்:—** இவ் வாறாய புத்தியினால், ஞாநம் உண்டாகின்றது.

**பிரசிநம்:—** ஞாநம் புத்தியினின்றும் உண்டாயின், உற்பத்தியான ஞாநத்திற்கு நாசமு முண்டாம்.

**உத்தரம்:—** இந்த ஞாந ரூப புத்திரன், புத்தி ரூப மாதாவின் அபாவத்தினு லுண்டாகின்றனன்.

**பிரசிநம்:—** 'மாதாவின் அபாவத்தினுல் புத்திரன் உண்டாகின்றனன்' என்னும் அநர்த்த வசநம் ஜகத்தில் ஓரிடத்திலும் கேட்கப்பட வில்லை.

**உத்தரம்:—** கேட்பாயாக. வாதியே! * நண்டானது தனது மாதாவின் நாசத்தினு லுண்டாகின்றது. அங்ஙனமே, புத்தி ரூப மாதாவின் அபாவத்தினுல் நண்டு ரூப ஞாந முண்டாகின்றது.

**பிரசிநம்:—** புத்தியின் சுத்தி அபாவங்களில், யோகம் ஞாநம் சாதநங்க ளாம். இதற்குப் பிரமாணங் கூறுவீராக.

**உத்தரம்:—** ஸ்மிருதி பிரமாண மாம்.

**"द्वौ क्रमौ चित्तनाशस्य यागो ज्ञानं च राघव ॥**
**योगस्तद्वृत्तिरोधो हि ज्ञानं सम्यगवेक्षणम् ॥" (५-९-७२)**
**(लघु योग वासिष्ठः)**

"த்வெள க்ரமெள சித்த நாசஸ்ய யோகோ ஞாநஞ் ச ராகவ, யோகஸ் தத்விர்த்தி ரோதோ ஹீ ஞாநம் சம்யக வேக்ஷணம்" (வாசிட்டம் 5—வீத கவ்வியன் 72)

---

* "நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்தில், கொண்ட கருவளிக்குங் கொள்கைபோல்—ஒண்டொடீஇ, போதந் தநங் கல்வி பொன்றவரும் காலமயல், மாதர்மேல் வைப்பார்ம நம்." நல் வழி 38. இச் செய்யு ளானும், நண்டு மாதாவை கொன்று வரும என்பதை உணர்க.

இதன் பொருள்:— ஏ ராகவ! சித்தத்தின் நாசத்தி விரண்டு கிரம மிருக்கின்றது, யோகமும், ஞானமு மாம். யோகம் அந்தச் சித்தத்தின் விருத்தியினைத் தடுப்ப தாம். நிச்சய ரூப ஞானம் நன்கு சாக்ஷாத்காரத்திற்குச் சாதந மாம். ஞானத்தின் பிராப்தி விசாரத்தினு லுண்டாகின்றது.

**3. புத்தியின் நிர்ணயத்தில் தத்துவ ஞாந முண்டாவதற்குக் கூறிய யுக்தி முற்றிற்று.**

---

## 4. கர்த்ருத்வ போக்த்ருத்வத்தினை நிர்ணயிக்கும் யுக்தி.

இப் போது கர்த்ருத்வ போக்த்ருத்வ நிர்ணயத்தில் நான் காவது யுக்தி போதிக்கப்படுகின்றது.

**சித்தாந்தி பிரசிநஞ் செய்கின்றார்:—** "நான் கர்த்தா போக்தா" என்பதனை, அதற்குப் பிந்ந மாக அங்கீகரிக் கின்றனையா? அபிந்ந மாக அங்கீகரிக்கின்றனையா? பிந்நா பிந்ந மாக அங்கீகரிக்கின்றனையா? பிந்ந மாக நீ அங்கீகரிக்கின், இதற்குச் சுக துக்க முண்டாவதனால், உனக்குச் சுக துக்க முண்டாக வேண்டுவ தில்லை. அபிந்ந மென நீ கூறின், அதற்கு அபாவ முண்டாவதனால், உனக்கும் அபாவம் உண்டாதல் வேண்டும். பிந்நாபிந்ந மெனக் கூறின், அது பொருந்தா தாம். எங்ஙனம்? தமப் பிரகாசங்கள் பரஸ்பரம் விரோத மாக விருத்தலின், ஒன்ருவ தில்லையோ. (அது போலு மாம்.) அல்லது, ஒரு புருஷன், "இன்னவன் ஜீவத்து மிருக் கின்றான், மரித்து மிருக்கின்றான்" என்று கூறின், அது பொருந்தா தாம்.

**உத்தரம்:—** வாதி கூறுகின்றான். கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் ஆகாசத்தில் கடத்தைப் போன்று இருப்பனவாம்.

**பிரசிநம்:—** நீ ஆகாசத்தினைப் பிந்ந மாக அங்கீகரிக்கின்றனையா? அபிந்ந மாக அங்கீகரிக்கின்றனையா? பிந்நாபிந்ந மாக அங்கீகரிக்கின்றனையா?

**உத்தரம்:—** பிந்ந மாக அங்கீகரிக்கின்றேன்.

**பிரசிநம்:—** பிந்ந மாக அங்கீகரிக்கின், பிந்நத்தினை நான் முன்னர் நிஷேதஞ் செய்து வந்தேன். அதனால், பிந்நம் பொருந்தாது. அபிந்ந மாக அங்கீகரிக்கின், கடத்திற்கு நாச முண்டாவதனால், கடாகாசமும் நாச மடைதல் வேண்டும். இதனால், கர்த்ருத்வ போக்த்ருத்வங்களின் நாசத்தினால், உனக்கும் நாச முண்டாதல் வேண்டும்.

**உத்தரம்:—** கடத்தின் நாச முண்டாவதனால், கடாகாசம் நாச மாவ தில்லை. மஹாகாசத்தில் லய மாகின்றது.

**பிரசிநம்:—** பெரிய கட ஸ்தாந மான பிரஹ்மாண்டத்தின் அபாவத்தினால், மஹாகாசம் எங் கிருக்கின்றது? மஹாகாசமு மிருப்ப தில்லை. அதனால், இந்த உனது உத்தரம் பொருந்த வில்லை.

**உத்தரம்:—** 'நான் கர்த்தா போக்தா' வென்பது பிந்நமாய்ப் பொருந்துவது மில்லை; அபிந்ந மாகப் பொருந்துவது மில்லை; பிந்நாபிந்ந மாகப் பொருந்துவது மில்லை. ஏனெனின், வாஸ்தவத்தில் கற்பித மாம்.

பிரசிநம்:— கற்பித மாயின், குரு சாஸ்திரங்கள் எதன் பொருட்டு நிற் (இருக்) கின்றன.

**உத்தரம்:**— கேவலம் பிராந்தியினை நிவிர்த்தி செய்தற் பொருட் டாம். எவ் வாறு? ரஜ்ஜுவில் சர்ப்பத்தின் பிராந்தி உண்டாகின்றதோ, அது தீபத்தினைக் கொண்டு பார்க்கின், நிவிர்த்தி யாய் விடுகின்றது.

**சித்தாந்தி கூறுகின்றார்:**— உன்னால் யதார்த்த நிர்ணயஞ் செய்யப்பட வில்லை. இதனால், என்னிடத்தினின்றுஞ் சிர வணஞ் செய்வாயாக. 'நான்' என்பது சத்திய மாம். கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் மித்தை யாம். பிந்நமும் பொருந்துவ தில்லை, அபிந்நமும் பொருந்துவ தில்லை, பிந்நாபிந்நமும் பொருந்துவ தில்லை.

**பிரசிநம்:**— வாதி கூறுகின்றான். இதில், பிரமாணம் யாது?

**உத்தரம்:**— இதில், ஸ்மிருதி பிரமாண மாம்.

**" अहं वृत्ति विषयो ह्यात्मा "**

" அஹம் விர்த்தி விஷயோ ஹ்ய யாத்மா "

இதன் பொருள்:— நிச்சய மாக அகம் விருத்தியின் விஷயம் ஆத்மா வாம்.

பிரசிநம்:— 'நான் (என்னும்) கர்த்ருத் தன்மை, போக்த் ருத் தன்மைகளை மித்தை' என்று நீர் கூறின், குரு சாஸ்த்ரங் கள் எதன் பொருட்டு நிற் (இருக்) கின்றன.

உத்தரம்:— இந்த மித்தையினை நிவிர்த்தி செய்யும் பொருட்டாம்.

பிரசிநம்:— மித்யா வஸ்துவின் பாநம் எவ்வாறு உண்டாகின்றது? விளங்கினும், அதன் நிவிர்த்தி எனுண்டாம்.

உத்தரம்:— மித்தையும் விளங்குகின்றது; எங்ஙனமெனின், ரஜ்ஜுவில் சர்ப்பமும், கிளிஞ்சிலில் வெள்ளி முதலியனவும், மித்தையு மாம், பாநமு மாம்; (அது போல வாம்.)

பிரசிநம்:— ரஜ்ஜு சர்ப்ப முதலியவற்றிற்குச் சாதிரிசியத் தன்மை யிருக்கின்றது. ஈண்டுப் பிரபஞ்ச ஆத்மாகட்குச் சாதிரிசியத் தன்மை எவை? ஆதலின், உமது திருஷ்டாந்தம் பொருந்த வில்லை. அதனிடத்து வேறு தோஷமும் உள. எல்லாத் தேசத்திலும் ஆவரண முண்டாகின்றது. ஆத்மாவின் அஞ்ஞாநம் ஏக தேசத்தில் கூறப்பட்டிருக்கின்றது. இதனால், உமது கூற்றுப் பொருந்த வில்லை.

உத்தரம்:— வேறு திருஷ்டாந்தங் கொடுக்கின்றேன். எவ்வாறு? ஸ்படிகம் சுத்தமா யிருக்கின்றது, அதன் சமீபத்தில், கறுப்பு மஞ்சள் புஷ்பங்க ளிருக்கின், கருப்பு மஞ்சள் ரூபங்களின் விளக்கம் உண்டாகின்றன. ஆதலால், இதில், கறுப்பு மஞ்சள் ரூபங்கள், ஸ்படிகத்தில் மித்தை யாம். இதனால், ஸ்படிக புஷ்பங்களுக்குச் சாதிரிசியத் தன்மையுமில்லை; சர்வ தேச ஆவரணமும் பொருந்துவ தில்லை. ஆனால், கறுப்பு மஞ்சளின் விளக்கம் உண்டாகின்றன.

**தார்ஷ்டாந்தங் கூறப்படுகின்றது:—** இவ் வாறே, ஸ்படிக ஸ்தாந மாகிய ஆத்மா சுத்த மாம். கருப்பு மஞ்சள் புஷ்ப ஸ்தாந மாய அந்தக் கரணத்தின் சையோகத்தினால், பிராரப்த வசத்தினால், சுக துக்காதிகளின் பாந முண்டாகின்றன.

**பிரசிநம்:—** இதில், பிரமாணம் யாது?

**உத்தரம்:—** ஸ்மிருதி பிரமாண மாம்.

**"यथा स्फटिकं शुद्धमपि ज्ञातं रक्तपुष्पादिसमीपकसंबंधा ल्लोहितत्ववद्भाति। तद्वज्ज्ञानिनामात्मा शुद्धमपि ज्ञातं प्रारब्धवशाद्विश्वकर्तृत्वादि अंतकरणसंबधात्प्रपंचादिवद्भाति ॥ इति सोपाधिको भ्रमः"**

"யதா ஸ்படிகம் சுத்தமபி ஞாதம் ரக்த புஷ்பாதி சமீபக சம்பந்தால் லோஹிதத்வ வத் பாதி, தத்வஜ் ஞாநிநாமாத்மா சுத்தமபி ஞாதம் பிராரப்த வசாத் விசுவ கர்த்ருத்வாதி அந்தக்கரண சம்பந்தாத் பிரபஞ்சாதி வத் பாதி. இதி சோபாதிகோ பிரம:"

இதன் பொருள்:— எங்ஙனம்? ஸ்படிகத்தினைச் சுத்த மாக அறிந்தும், சிவப்புப் புஷ்பாதிகளின் சமீப சம்பந்தத்தினால், சிவப்பு (த் தோற்றுவது) போன்று பாந மாகின்றதோ, அங்ஙனமே, ஞாநிகளின் ஆத்மா சுத்த மாக உணர்ந்தும், பிராரப்தத்தின் வசத்தினால், ஜகத்தின் கர்த்ருத்வாதிகள், அந்தக் கரணத்தின் சம்பந்தத்தினால், பிரபஞ்சம் போன்று விளங்குகின்றது. இது சோபாதிகப் பிராந்தி யாம். இவ் வாறு ஞாநிகளைக் குறித்துக் கூறிய தாம்.

**4. கர்த்ருத்வ போக்த்ருத்வத்தை நிர்ணயிக்கும் யுக்தி முற்றுப் பெற்றது.**

---

## 5. ஜீவ ரூப வேசியின் நடந நிர்ணயத்தில் தத்வ ஞாநத்தின் யுக்தி.

இப்போது ஜீவ ரூப வேசியின் நடந நிர்ணயத்தில், தத்துவ ஞாநம் உண்டாவதற்கு ஐந் தாவது யுக்தி கூறப்படுகின்றது.

**திருஷ்டாந்தம்:**— ஒரு வேசி, இரண்டு சகிகளைக் கூடக் கூட்டிக் கொண்டு போய், அரசனது சந்தோஷத்தின் பொருட்டு, நடநஞ் செய்தனள். ஆனால், தனது விருத்தாந் தங்களையும், சகியினது விருத்தாந்தங்களையும் அறிய வில்லை. நடித்து எய்ப் புற்ற காலை, அரசனை நமஸ்கரித்து, 'எனக்கு இருத்தற்குக் கட்டளையிடல் வேண்டு' மென்று கேட்டனள். அரசன் அவ்வாறே, ஆஞ்ஞை செய்தான். தான் நடநஞ் செய்வதினின்றும் தவிர்ந்து உட்கார்ந்து கொண்டு, இரண்டு ஸ்த்ரீகளின் நடநத்தினையும், அவர்களது குண அவகுணங் களையும் பார்த்தனள்; அரசனையும் பார்த்தனள், வாத்தியக் காரரையும், பாடுவோரையும், அவர்களுடைய வஸ்திரங் களையும், ஆபரணங்களையும், பார்த்தனள். அப்பொழுது, இவ் வேசி எல்லாவற்றினின்றும் வேறாய்ச் சுகியா யிருந்தனள்.

**தார்ஷ்டாந்தம்:**— கூறப்படுகின்றது. அரச ரூப ஈசுவர னுக்கு, ஜீவ ரூப நாயகி, மநம் புத்தி ரூப சகிகளுடன் கூடப் பிரசந்நஞ் செய்தற் பொருட்டுக், கர்மாதிக ளாய சாதந ரூப நடநத்தினை நடித்தனள். ஆனால், தனது விர்த்தாந்த ரூப கர்மாதிகளின் சொரூபத்தினையும், சகிகளின் விர்த்தாந்த ரூப கர்மாதிகளின் சொரூபத்தினையும் அறிய வில்லை. நடநத்தி னின்றும் எய்ப்புறுதல் ரூப கர்மாதிகள், உபாஸனையினின்றும்

வேறாய், அரச ரூப ஈசுவரனை நமஸ்கரித் (தல் ரூப) து, "எ பகவன்! என்னை இருத்தற்கு—ஆக்ஞா ரூப கர்மாதிகளின் உபாஸனையினின்றும் நிவிர்த்தி யடைதற்கு, ஆஞ்ஞை செய் விராக" வென்று பிரசிநஞ் செய்தனள். அக்கால், அரச ரூப ஈசுவரனிடத்தினின்றும் ஆஞ்ஞை பெற்று, நடநத்தி னின்றும் நிவிர்த்தியாய், மநம் புத்தி ரூப இரண்டு சகிகளின் வியவகார ரூப நடநத்தினைப் பார்த்தனள். மற்றும், அவர் களின் குண அவகுண ரூப சுக துக்கங்களையும் பார்த்தனள். ஈசுவர ரூப அரசனையும் பார்த்தனள். இந்த்ரிய ரூப வாத்தியக் காரரையும் பார்த்தனள். பிராண ரூப பாடகர்களையும் பார்த் தனள். அவர்களின் வஸ்திர ஆபரண ரூப ஸ்தூல தேஹத் தினையும், பார்த்தல் ரூப அநுபவஞ் செய்தனள். இவ் வெல்லா வற்றினின்றும் வேறாய் ஆநந்த ரூப சுக மாய் இருப்பது பரிபூரணப் பிரஹ்ம மாம்.

பிரசிநம்:— இதிற் பிரமாணம் யாது?

உத்தரம்:— ஸ்மிருதி பிரமாண மாம்.

**"देहेंद्रियमनो वुद्धिप्रकृतिभ्यो विलक्षणम् ।
तद्वृत्तिसाक्षिणं विद्यादात्मानं राजवत्सदा ॥" १८**

"தேஹேந்தர்யமனோ புத்தி பிரக்ருதிப்யோ விலக்ஷணம்,
தத்விர்த்தி சாக்ஷிணம் வித்யா தாத்மாநம் ராஜவத் ஸதா."
(ஆத்ம போதம் 18.)

இதன் பொருள்:— தேஹம், இந்த்ரியங்கள், மநம், புத்தி, பிரக்ருதி என்னும் அஞ்ஞாநம், இவற்றினின்றும் எது விலக்ஷணமா யிருக்கின்றதோ, அவற்றின் விருத்திக்கு எது

சாக்ஷியோ, அந்த ஆத்மாவினைச் சதா ராஜன் போன்று அறிதல் யோக்ய மாம்.

பிரசிநம்:— ஆத்மாவினை ஸ்த்ரீயாக எதனால் கூறப் பட்டது?

**உத்தரம்:**— புருஷனு யிருந்து விபரீத நடத்தை யுடைய வனுக்கு 'ஸ்த்ரீ' என்று பெயர். ஏனெனின், புருஷனின் விபரீத தர்ம முடையவர் ஸ்த்ரீ யாவர். இதனால், ஸ்த்ரீ என்று கூறப்பட்டது.

**5. ஜீவ ரூப வேசியின் நடந நிர்ணயத்தில் தத்துவ ஞாநத்தின் யுக்தி முற்றுப் பெற்றது.**

---

**6. தத்துவமசி (என்னும்) சுருதிப் பொருளை வேறு விதமாகச் சித்தஞ் செய்தற்கு யுக்தி.**

தத் துவ மசி என்னும் சுருதிப் பொருளை வேறு விதமாகச் சித்தஞ் செய்வதற்கு ஆறுவது யுக்தி கூறப்படு கின்றது.

பிரசிநம்:— உமது மதத்தில் மோக்ஷம் எவ் வாருயது?

**உத்தரம்:**— எமது மதத்தில் மோக்ஷம் ஆத்ம ஞாநத் தினுல் உண்டாகின்றது.

பிரசிநம்:— ஆத்ம ஞாநம் எவ் வாறு உண்டாகின்றது? எதனிடத்து மநத்திற்கும், வாக்கிற்கு மடைதலில்லை. எண்டுச் சுருதி பிரமாண மாம்.

**"अवाङ्मानसगोचरम् ॥"**

* "அவாங் மாநச கோசரம்."

இதன் பொருள்:— வாக்கிற்கும், மநத்திற்கும் கோசர மில்லாதது. அப்பிரத்தியட்சம் என்பது பொரு ளாம்.

**உத்தரம்:—** உனது கூற்றுச் சத்தியமே யாம். மநத்திற்கும், வாக்கிற்கும் கோசர மின்றிய தாம். ஆனல், லக்ஷணையின் வாயி லாக ஞாநம் உண்டாகின்றது.

**பிரசிநம்:—** லக்ஷணை எவ் வா றுயது?

**உத்தரம்:—** ஜகத், அஜகத் என்னு மிரண்டு லக்ஷணையினையும் விட்டு, ஜகத், அஜகத் லக்ஷணையினல் ஞாநம் உண்டாகின்றது.

**பிரசிநம்:—** ஜகத், அஜகத் லக்ஷணை எவ் வா றுயது?

**உத்தரம்:—** தத் பத தொம் பத மென்னும் இரண்டன் வாச்சியார்த்தத்தின் தியாகத்தினல், லக்ஷியார்த்தத்தில் ஏகத் தன்மை அடைவது ஆத்ம ஞாந மாம்.

**பிரசிநம்:—** எவ் வாறு தொம் பதம் பிரத்யக்ஷமோ, இவ் வாறே தத் பதம் ப்ரத்யக்ஷ மாயின், வாச்சியார்த்தத்தின் தியாக முண்டாம். நீர் கூறுதலை மாத்திரம் செய்து விட்டீர். நான் தத் பதம் தொம் பதங்களின் வாச்சியார்த்தத்தினைத் தியாகஞ் செய்து விட்டேன். அஃது உண்டாவ தில்லை.

---

* மநதோடு கூட வாக்கு எதனை அடையாமல் திரும்புகின்றதோ, அது பிரஹ்மம்.

எங்ஙனம்? ஒரு தரித்திரன், "நான் ராஜாவா யிருக்கின்றே" னென்று கூறிவிட்டனன். ஒருவன், நன்மையே, "எனக்குப் பதி னாயிரம் ரூபாய் கொடு" வென்று கேட்டனன். அப்பொழுது (அவன்) எங் கிருந்து கொடுப்பான். இதனால், கூறுதலில் மாத்திரம் ராஜாவா யிருக்கின்றான். ஆகலின், தத் பதம் பிரத்யக்ஷ மானு லன்றி, வாச்சியார்த்தத்தின் தியாகம் உண்டாவ தில்லை. இதனால், உமது சித்தாந்தம் பொருந்துவ தில்லை.

**உத்தரம்:—** கேட்பாயாக. நீ நன்கு அறிய வில்லை. எவ் வாறு தொம் பதம் பிரத்யக்ஷமோ, அவ் வாறே தத் பதமும் பிரத்யக்ஷ மாம். இப் பொழுது, தத் பதத்தினைப் பிரத்யக்ஷத்தினு லறிவிப்பாம். உமது அர்த்தம் புது வழியாய் இருக்கின்றது. உண்மை, எவ் வாறு உமது அஞ்ஞானம் நஷ்ட மாயிற்று? பூர்வாசாரியரும் வேதாந்தத் திற்குப் * பாவந பக்ஷம் சித்தஞ் செய்திருக்கின்றனர். எவ் வாறு முமுக்ஷுவிற்கு ஞானம் உண்டாகின்றதோ, அவ் விவ் விசாரத்தில், தத் பத ரூப குரு ப்ரத்யக்ஷ மாம். ஏ னெனின், முமுக்ஷு, குருவினைப் பக்தி பூர்வகம் சாக்ஷாத் ஈசுவர னாக அங்கிகரிக்கின்றனன்.

**பிரசினம்:—** இதில் பிரமாணம் யாது? ஈண்டுப் பக்தியின் பிரகரணமா இது? ஞாந காண்டத்தின்கண் இவ் வா றுய பொருள் சித்திப்ப தில்லை.

**உத்தரம்:—** நீ கேட்பாயாக! நீ ஞாந காண்டம் எங்ஙனம் கேட்டாய். பார்ப்பாயாக. எனது அர்த்தத்தில் இச் சுருதி பிரமாண மாம்.

---

* பாவந (பக்ஷம்) - 52 - அல்லது -குள்ள - அல்லது குறைந்த.

**"यस्य देवे पराभक्तिर्यथा देवे तथा गुरौ ।**
**तस्यैते कथिता ह्यर्थाः प्रकाशते महात्मनः ॥ ६—२३"**

"யஸ்ய தேவே பரா பக்திர் யதா தேவே ததா குரௌ,
தஸ்யைதே கதிதா ஹ்யர்த்தா ப்ரகாசந்தே மஹாத்மந:"
(சுவேதாசுவதர உபநிஷத் 6—23.)

இதன் பொருள்:— எந்தப் புருஷனுக்கு, எவ் வாறு தேவன் என்னும் ஈசுவரனிடத்தில் சிரேஷ்ட மான பக்தி இருக்கின்றதோ, அவ் வாறே குருவினிடத்திலு மிருக்கின்றதோ, அப் (மகா) புருஷனுக்குக் கூறிய இவ் வர்த்தங்கள் விளங்குகின்றன.

இப் பொழுது தத் பத தொம் பத வாச்சியார்த்தங்களின் தியாகத்தினல், லக்ஷியார்த்தத்தில் ஏகத் தன்மை அறிவிக்கின்றேன். இந்தப் பக்ஷத்தின்கண்ணே தத் பத ரூப குருவின் வாச்சியார்த்தம் யா தெனின், தேஹ இந்த்ரிய பிரான மநங்க ளாம். "தத்துவமசி" (என்னும்) சுருதியால் உபதேசஞ் செய்வது ஞாந மாம். அஃதிருக்கின்றது. இப் பொழுது சிஷ்யரது வாச்சியார்த்தத்தினைக் கூறுகின்றேன். தேஹம் இந்த்ரியம் மநம் அஞ்ஞாநங்கள் வாச்சியார்த்தங்களாம். இவ் விருவரது வாச்சியார்த்தத்தின் தியாகத்தினல், 'அகம் பிரஹ்மாஸ்மி' என்று அநுபவம் உண்டாம். 'நான் ப்ரஹ்மமாய் இருக்கின்றேன்' என்பதன்கண், 'நான் ப்ரஹ்ம' மென்பது குருவின் லக்ஷியார்த்த மாம். இவ் வாறு, ஜகஜ்ஜகல் லக்ஷணை சித்த மாயிற்று. இதன் தாத்பர்யம் இஃதாம். குருவின் ஞாநம், சிஷ்யனது அஞ்ஞாநத்தினை நாசஞ் செய்து, தானும் லய மாய் விடுகின்றது. சிஷ்யன் ஞாந சொரூப

மாகவே இருக்கின்றான். அடே வாதி! இப்பொழுது நீ விசாரணை செய்வாயாக. மநம் வாக்குக்கட்கு அவ் ஈசுவரன் அறியக் கூடியவனாக வில்லை. இதன் ஞாநம் சிஷ்யனுக்கு உண்டானது.

6. தத்துவமசி என்னும் சுருதியின் பொருளை வேறு பிரகாரமாகச் சித்தஞ் செய்தல் என்னும் யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 7. (அடிக் கடி) அக் கரை நிர்ணயத்தில் தத்வ ஞாநப் பிராப்தி யுண்டாவதன்கண் யுக்தி.

இப்போது (அடிக் கடி) அக் கரை நிர்ணயத்தில், தத்வ ஞாநப் பிராப்தி யுண்டாவதன்கண் ஏழாவது யுக்தி கூறப் படுகின்றது.

முதல் திருஷ்டாந்தம் கூறப்படுகின்றது:—ஒரு புருஷன், விசாரஞ் செய்து கொண்டு, நதியின் சமீபத்திற் சென்றனன். ஆண்டு ஜநங்கள், அக் கரைக்குச் சென்று கொண்டிருந்தனர். "நானும் உங்களோடு அக் கரைக்குச் செல்லுகிறேன்" என்று இவன் கூறினன். அவன் அவர்களோடு அக் கரை சென்றனன். அக் கரை யடையுங் காலையில், அக் கரையி லுள்ள ஜநங்கள், இக் கரைக்கு வந்து கொண்டிருந்தனர். அவர்களை "நீங்கள் எங்குச் செல்லுகிறீர்கள்" என்று கேட்டனன். (அதற் கவர்கள்) "நாங்கள் அக் கரைக்குச் செல்லுகிறோம்" என்று கூறினர். உங்களுக்குப் பைத்தியம் பிடித்திருக்கின்றது, 'நான் அக் கரைக்கே வந்திருக்கின்றேன்' என்று, அவர்க

ளிடத்தில் இவன் கூறினன். கரையி லுள்ளவர்கள், 'உனக்குப் பைத்தியம் பிடித்திருக்கின்றது. நாங்கள் அக் கரைக்குப் போகின்றோ' மென்று கூறினர். நூறு—ஐம்பது மனிதர் இவ் வாறு கூறுங்கால், இவன், "அக் கரை யதுவேயா" மென உணர்ந்து, மீண்டுந் திரும்பினன்; மீண்டும் வந்தனன். இங்கு வந்ததும், பின்னர், ஜநங்கள் அக் கரை செல்வதைப் பார்த்தனன். அப் பொழுது அவன், "நீங்கள் எங்குச் செல்லுநின்றீர்கள்" என்று கேட்டனன். அவர்கள், "நாங்கள் அக் கரைக்குச் செல்லுகின்றோ" மென்று கூறினர். இவன் "அக் கரை இதுவே யா" மென்று கூறினன். "உனது புத்திக்கு யாது வந்தது" (என்றனர்.) "அக் கரை இதுவன்று, அக் கரை அதுவே யாம். நாங்கள் அக் கரைக்குச் செல்லுகின்றோ" மென்று அவர்கள் கூறினர். அவர்களோடு மீண்டும் சென்றனன். இவ் வாறு, பன் முறை இங் கிருந்து அங்கும், அங் கிருந்து இங்கும் வருதல் போதலைச் செய்தனன். ஆயினும், அக் கரையின் நிச்சயம் ஒன்றும் உண்டாக வில்லை. தனது மநத்தில் உதாசீந னுயும், கவலை யுடையவனுயும் உட்கார்ந்திருக்குங் காலையில், ஒரு மஹா புருஷன், இவனது துக்கத்தினைப் பார்த்து, தயையால், "நீ யேன், துக்கியா யிருக்கின்று" யென்று கேட்டனன். அப் போது, "ஏ மஹா ராஜாவே! அக் கரையின் நிர்ணயம் உண்டாக வில்லை. இக் கரையி லிருப்பவர்கள் அக் கரையைக் கரை யென்கிறுர்கள்; அக் கரையி லிருப்பவர்கள் இக் கரையைக் கரை யென்கின்றனர்" என்று இவன் கூறினன். அப் பொழுது அவர், "பிதா பெரியவனு? புத்திரன் பெரியவனு? என்று, நான் உன்னைக் கேட்கிறேன்" என்று கூறினர்.

"மஹா ராஜாவே! பிதா பெரியவ" ரென்று அவன் கூறினன். மற்றும், உலகத்தி லுள்ளவரையும், "பிதா பெரியவரா? புத்திரன் பெரியவனு? என்று கேட்பாயாக" என்று அவர் கூறினர். அப் போது, எல்லோரும், "மஹா ராஜாவே! பிதாவே பெரியவர்" என்று கூறினர். அப் பொழுது, "யாண்டு நீ இருக்கின்றனையோ, இஃதே அக் கரையின் கரை யாம்" என்று மஹாநுபாவர் கூறினுர். உனது அநுபவத் தால் பார்த்துக் கொள். எங்கு நீ இருக்கின்ருயோ, அது, அக் கரைக்குக் கரை யாம். பின்னர், அக் கரையினை அறிவதற்கு யா திச்சை செய்வன்? அப் புருஷன், (அக் கரையினை) அறிந்து அத்யந்தம் பிரசந்நன் ஆயினன்.

**இப் பொழுது தார்ஷ்டாந்தத்தில் போருத்துவாம்:**— ஒரு புருஷன் கர்மாதிகளைச் சாதநஞ் செய்பவர்களோடு சேர்ந்து, கர்மாதிகளினுல் சுவர்க்காதிகளை அடையும் பொருட்டு, அஞ்ஞாந ரூப நதியின் கரையினை அடைந்தான். அங் கிருந்து எனையர் சுவர்க்கத்தின் போகங்களை அநுபவித்து, பின்னர்ச் சம்பாதித்தற்கு, மர்த்திய (மநித) லோகத்திற்கு வந்துகொண் டிருந்தனர். இவன், "நான் சுவர்க்காதியின் பிராப்தியின் பொருட்டு, அஞ்ஞாந ரூப நதியினின்றும் கரையினை அடைந்துவிட்டேன்" என்று உணர்ந்தனன். சுவர்க்கத்தி னின்றும் வருகின்றவர்கள் மநித லோகத்தினையே சிரேஷ்ட மாகக் கூறுகின்றனர்.

**பிரசிநம்:**— இதற்குப் பிரமாணம் யாண்டு எழுதி யிருக் கின்றது?

**உத்தரம்:—** சாஸ்த்ரத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

**गायंति देवाः किल गीतकानि धन्या हि ये भारतभूमिभागे।**
**स्वर्गापवर्गस्य फलार्जनाय भवंति भूयः पुरुषाः सुरत्वात् ॥**

"காயந்தி தேவா: கில கீதகாநி தந்யா ஹி யே பாரத பூமி பாகே, ஸ்வர்க்காபவர்க்கஸ்ய பலார்ஜ்ஜநாய பவந்தி பூய: புருஷா: சுரத்வாத்"

இதன் பொருள்:— சுவர்க்கத்தில் தேவர்கள் இந்த ஸ்துதியைப் படிக்கின்றனர். எந்தப் புருஷன் மர்த்திய (மநித) லோகத்தில், பாரத கண்டத்தில் பிறந் திருக்கின்றனனோ, அவன் தந்யன். அவ் வாறே, சுவர்க்க மோக்ஷ பலன்களின் சம்பாதநத்தின் பொருட்டு யோக்ய னாகின்றான். பாரத கண்டம் சுவர்க்க மோக்ஷங்களைக் கொடுப்ப தென்பது பொரு ளாம். இதனால், தேவர்களினும் மநிதர் சிரேஷ்டர் ஆவர். பின்னர், மநித லோகத்தில் யஞ்ஞாதி கருமங்களைச் செய்து, சுவர்க்காதி லோகங்கட்குச் செல்லுகின்றனர், மீண்டும் திரும்புகின்றனர். அவர்கள் சிரம முற்று உட்கார்ந் திருக்கின்றனர். அஞ்ஞாநம் நஷ்ட மாக வில்லை. இதனால், அதிக துக்க முடையோர் ஆகின்றனர். ஒரு ஞாநி புருஷன் வந்து, தயையினால், "நீ என் துக்கியா யிருக்கின்றாய்" என்று கேட்டனன்.

**பிரசிநம்:—** ஞாநியோ விஷய மின்றி இருக்கின்றான். அவனுக்குத் தயை எங் கிருந்து உண்டாயிற்று?

**உத்தரம்:—** ஞாநிக்கு, மைத்ரி கருணை முதிதை உபேக்ஷை என நான்கு இருக்கின்றன. இந்த நான்கின் பொருளைக் கூறுவாம். 'மைத்ரீ' என்பது, சுகியா யுள்ள

ஸாது புருஷர்க ளிடத்து வைக்கும் மித்ர திருஷ்டி யாம், 'கருணை' என்பது, துக்கிக ளிடத்து வைக்கும் தயை யாம். 'முதிதை' என்பது, புண்யாத்மாக்க ளிடத் துண்டாம் ஆநந்த மாம். 'உபேக்ஷை' என்பது, பாபி—விபரீத வியவகார முடையோரை விடுத லாம். இப் பிரமாணத்தினுல், அவர் தயை செய்தனர். அப் புருஷன், சாதந சதுஷ்டயத்தினுல் சம்பன்னனு யிருந்தனன். அவன், "மகா ராஜாவே! இந்த லோகத்தி லிருப்பவர்கள், "அந்த லோகத்தினைச் சிரேஷ்ட" மென்று கூறுகின்றனர். அந்த லோகத்தி லிருப்பவர்கள், 'இந்த லோகத்தினைச் சிரேஷ்ட' மென்று கூறுகின்றனர். இவ் விரண்டினுள் எது சிரேஷ்ட மென்னும் நிச்சய முண்டாக வில்லை" என்று கூறினன். அவர், "பிதா—புத்திர ஸ்தாந நிர்க்குண சகுணங்களை வர்ணநஞ் செய்தனர். மற்றும், சுவர்க் காதிகளி னடைவு சகுண உபாஸனையினு லுண்டாகின்றது, அஞ்ஞாநத்தின் நிவிர்த்தி நிர்க்குண விசாரத்தினுல் உண்டா கின்றது. அந்தச் சகுண உற்பத்தியின் காரணம் நிர்க்குணமே யாம். அந்த நிர்க்குண ரூபம் நீயா யிருக்கிறுய்" என்று முடிவு செய்தனர்.

பிரசிநம்:— ஒரு பிரமாணங் கூறுக வென்று வாதி கேட்டனன்.

உத்தரம்:— சித்தாந்தி கூறுகின்றுர். "அயம் ஆத்மா பிரஹ்மம்" இதன் பொருள்:— இவ் வாத்மா பிரஹ்ம மாம். அவன், இவ் விசாரத்தினுல் பிரஹ்மாநந்தத்தினை அடைந் தான்.

7. (அடிக் கடி) அக் கரை நிர்ணயத்தில் தத்வ ஞாநப் பிராப்தி யுண்டாவதன் யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 8. சநகாதிகளின் ஜந்ம முதலியவற்றினை நிர்ணயிக்கும் யுக்தி.

இப் போது, சநகாதிகளின் ஜந்ம முதலியவற்றின் நிர்ணயத்தில் எட் டாவது யுக்தி கூறப்படுகின்றது.

**வாதி சங்கை செய்கின்றான்:**— சநகாதி ஞானிகளின் ஜந்மம் எவ் வாறு? உண்டாகின்றது. இதிற் பிரமாணமுமிருக்கின்றது.

**" अपांतरतमवसिष्टसनत्कुमारादीनां निर्गुणब्रह्मविदां पुनः पुनरुत्पत्तिः स्मर्यते । अपांतरतमः कलिद्वापरयोः संधौ विष्णुनियोगात्कृष्णद्वैपायनः संबभूवेत्यादिना ॥ "**

" அபாந்தரதமவசிஷ்ட-சநத்குமாராதீநாம் நிர்க்குண பிரஹ்மவிதாம் புந: புநருத்பத்தி: ஸ்மரியதே. அபாந்தரதம: கலித்துவாபரயோ: சந்தெள விஷ்ணுநியோகாத் க்ருஷ்ணதுவைபாயந: சம்பபூவ. இத்யாதிநா "

இதன் பொருள்:— அபாந்தர தம ரிஷி-வசிஷ்ட-சநத்குமாரர் முதலிய நிர்க்குணப் பிரஹ்மத்தினை உணர்ந்தோர்க்கு, அடிக்கடி உற்பத்தி ஸ்மரிக்கப்படுகின்றது. அபாந்தர தம ரிஷி கலியுக துவாபர யுகங்களின் சேர்க்கையில், விஷ்ணுவின் நியோகத்தினால் வியாசர் ஆக உண்டாகின்றனர்.

**உத்தரம்:**— இதில் வியாசரது சூத்திரம் பிரமாணமாம்.

**"यावदधिकारमवस्थितिराधिकारिणाम् ॥" (३-३-३२)**

" யாவததிகாரமவஸ்திதி ரதிகாரிணாம் " (பிரஹ்ம சூத்ரம் 3—3—32.)

இதன் பொருள்:— அபாந்தர தம ரிஷி முதலிய அதிகாரிகளுக்கு, வேதத்தின் பிரவிர்த்தி முதலியவற்றிலும், ஜகத்தின் வியவ ஸ்தாபந காரணத்திலும், அதிகாரிக ளிடத்திலும் பரமாத்மாவோடு கூடி, எது வரை அதிகாரம் இருக்கின்றதோ, எது வரை பிராரத்த கர்ம மிருக்கின்றதோ, அது வரை அநேக சரீரங்களைத் தாரணை செய் திருக்கின்றார்கள். சநகாதிகள் ஈசுவர கோடியி லிருக்கின்றனர். இதனால், ஈசுவரனுக்கு ஜந்ம கர்மங்களினால் பந்தநம் இல்லை, லீலா மாத்திர மாம். ஈசுவரனது ஜந்ம காலம் ஞாநியினிடத்துப் பாதக மில்லை. காரணம்? ஈசுவரனது ஜந்மம் சுதந்தர மாம். ஈசுவரன் ஞாந சொரூப மாவன். வேறு பிரகாரமாகவுங் கூறப்படுகின்றது. அவரது பிராரத்தத்தின் பாகம் இவ் வாறு இருந்த தென்று நீ கூறுவாயாக. ஏனையர்கட்கும் பிராரத்த மிருக்கின்றதெனின், ஏனையர்கட்கு அவரோடு சம மன்றாம். ஏனெனின், இவரது ஞாநம் மறக்கப்படுவ தில்லை. ஏனையர்கட்கோ, பூர்வ ஜந்மத்தின் ஞாநமு மில்லை. இதனால், யாண்டு ஞாநியினிடத்தில், ஜந்மாதிகள் கூறப்படுகின்றனவோ, ஆண்டு ஈசுவர கோடியில் சேர்த்தே கூறப்பட்டிருக்கின்றது. யாண்டும், பிராமணாதிகளுக்குக் கூறப்பட வில்லை. சுருதி ஸ்மிருதி புராண இதிகாசங்களில் ஓரிடத்தும் பிரமாணம் கூறப்பட வில்லை. ஆதலால், சநகாதிகளுக்கு விகற்பம் வேண்டுவ தில்லை.

8. சநகாதிகளின் ஜந்ம முதலியவற்றின்
நிர்ணயத்தில் யுக்தி முற்றுப் பெற்றது.

---

**9. சநகாதிகளின் பிரஹ்மாகார விர்த்தி நிர்ணயத்தில் யுக்தி.**

இப்பொழுது, சநகாதிகளின் பிரஹ்மாகார விர்த்தி நிர்ணயத்தில், ஒன்பதாவது யுக்தி கூறப்படுகின்றது.

**பிரசிநம்:—** சநகாதிகளுக்குப் பிரஹ்மாகார விர்த்தி இருந்திருக்குமாயின், அவர்களுக்குச் சிவன் நக்ந (நிர்வாண) மாக எங்ஙனம் பார்க்கப்பட்டனர்? சிவனைப் பார்க்குங் காலத்து பிரஹ்மாகார விருத்தி இல்லை. நீ, "பிரஹ்மாகார விருத்தியு மிருந்தது, சிவனையும் பார்த்தனர்" என்று கூறுவாயாயின், ஒரு காலத்தில் இரண்டு விருத்திகள் ஸ்புரணமாவதில்லை. இதில், ஒரு யுக்தி கூறுகின்றேன். எங்ஙனம் ஒரு புருஷன், ஆனி மாதத்தில், மத்தியாந காலத்தில், கங்கையின் ஜலத்தில் நின்று கொண்டிருந்தான்; அவன் காலின் குளிர்ச்சித் தன்மையினை அநுபவஞ் செய்யுங் காலத்தில், வெயிலால் சிரசின் உஷ்ணத்தினை அநுபவஞ் செய்ததில்லை. சிரசின் உஷ்ணத் தன்மையினை அநுபவஞ் செய்த காலத்தில், காலின் குளிர்ச்சித் தன்மையை அநுபவஞ் செய்ததில்லை. இதனால், இரண்டு விகல்பம் ஏக காலத்தில் பொருந்துவதில்லை.

**உத்தரம்:—** ஆத்மா எவ்வாறு? வியாபகமென்று நான் கேட்கின்றேன்.

**வாதி கூறுகின்றான்:—** எவ்வாறு? வியாபகமாயிருக்கின்றது. நீயே கூறுவாயாக.

**உத்தரம்:—** ஆத்மா ஞாந மாத்திரம் வியாபக மாம். அறிதல் ஞாநமெனப்படுகின்றது. இதனால், அறிதல் மாத்திரம் சர்வ வியாபக மாம். சிவனைப் பார்க்குங் காலத்தில்,

அறிதல் மாத்திர மான சாக்ஷி யிருந்ததா? இல்லையா? எங்ஙனம்? ராஜா, சபையி லிருந்து கொண்டு, சபையினைப் பார்க்கின்றான். அப் பொழுது ராஜா, 'நான் ராஜாவா யிருக்கின்றே' னென்று, தன்னை அறிந்த தில்லையா? அறிந்தே இருக்கின்றான் என்பது பொரு ளாம். இதில், அதிகத் தன்மை யிது வாம்:— இவன் ஞாநி யாவன், அஞ்ஞாநியினிடத்தில் விகற்பம் உண்டாகலு மாம். ஆனால், ஞாநியினிடத்தில் விகற்பம் பொருந்தாது. ஏனெனின், சரீராதிகளைப் பாதித்து ஞாந சொரூப மாகவே நிலைத்திருக்கின்றான். அற்பத்தினை அறிதல் மாத்திரத்தினால் பிந்ந விகற்பங்கள் சம்பவியா. உனது திருஷ்டியா விருப்பின் பார்க்குக. காரணம்? ஞாநியினிடத்து இவ் வாறு கூறப்பட்டிருக்கின்றது.

"निमिषार्धं न तिष्ठंति वृत्तिं ब्रह्ममयीं विना ।
यथा तिष्ठंति ब्रह्माद्याः शुकाद्याः सनकादयः ॥ १३४"

"நிமிஷார்த்தம் ந திஷ்டந்தி விருத்திம் பிரஹ்மமயீம் விநா, யதா திஷ்டந்தி பிரஹ்மாத்யா: சுகாத்யா: சநகாதய:" (அபரோக்ஷாநுபூதி 134)

இதன் பொருள்:— எங்ஙனம்? பிரஹ்மா முதலியோர்களும், சுகர் முதலியோர்களும், சநகாதிகளும் பிரஹ்மாகார விருத்தியின்றி, அரை நிமிஷமு மிருந்த தில்லை. சதா பிரஹ்மாகார மாகவே இருந்தனர். பிரஹ்மாதிகள் ஜகத்தின் சம்பூர்ண வியவகாரமுஞ் செய்தனர். இவ் வாறு அபரோக்ஷாநுபவ மென்னுங் கிரந்தத்தில், ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிக ளவர்கள் கூறி யிருக்கின்றனர்.

சித்த சமாதியும் வாக்கிய சுதையில் கூறி யிருக்கின்றனர். அதனையுங் கேட்பாயாக.

देहाभिमाने गलिते विज्ञाते परमात्मनि ।
यत्र यत्र मनो याति तत्र तत्र समाधय: ॥ (      )

"தேஹாபிமானே கலிதே விஜ்ஞாதே பரமாத்மநி, யத்ர யத்ர மனோ யாதி தத்ர தத்ர சமாதய : (வாக்கிய சுதை)"

இதன் பொருள்:— தேஹாபிமானத்தினை நிவிர்த்தித்துப் பிரஹ்மாத்ம சொரூபத்தினை அறிவதனால், மனம் யாண்டு யாண்டுச் சஞ்சரிக்கும், ஆண்டு ஆண்டுச் சமாதி யாம்.

**9. சநகாதிகளின் பிரஹ்மாகார விருத்தி நிர்ணயத்தில் யுக்தி முற்றுப் பெற்றது.**

---

## 10. அஞ்ஞாநி ஞாநிகளின் நிர்ணயத்தில் யுக்தி.

இப் பொழுது, அஞ்ஞாநி ஞாநிகளின் நிர்ணயத்தில் பத் தாவது யுக்தி கூறப்படுகின்றது.

எத்தனையோ புருஷர்கள், தம்மை ஞாநி என்று கூறு கின்றனர், வியவகாரம் விபரீதமாகச் செய்கின்றனர். அவர் கட்கு யாராவது எதனையாயினும் கூறின், அவர்கள்; "நான் அசங்கனா யிருக்கின்றேன். அகர்த்தாவா யிருக்கின்றேன்; எனக்குப் புண்ணிய பாவம் அற்பமும் சம்பந்திப்பது மில்லை. நான் பிரஹ்ம சொரூபமா யிருக்கின்றேன்" என்று கூறு கின்றனர். 'இவன், எதனால் பிராமணனா யிருக்கின்றான்' என்று பிராமணனிடத்தில் தர்க்கஞ் செய்கின்றனர். 'நான்

பிராமணனு யிருக்கின்றேன்' என்கின்றனர். இதில், ஸமிருதி யினைப் பிரமாணமாகவுங் கொடுக்கின்றனர்.

"ब्रह्म जानाति ब्राह्मणः॥"

"பிரஹ்ம ஜாநாதி பிராஹ்மண:"

இதன் பொருள்:—பிரஹ்மத்தினை உணர்ந்தோன் பிராஹ்மணனுகின்றனன். இவ் வாறு கூறுவதனுல், அப் புருஷன் யதார்த்த விசாரஞ் செய்யப்பட வில்லை என்று அறியப்படுகின்றது. காரணம்? என்னை எனின், இவன், தேஹத்தினையே பிரஹ்ம மாக உணர்ந்தனன். இதனுல், "பிரஹ்மம் சைதந்ய மாம்; அசங்க மாம். அந்தப் பிரஹ்ம சைதந்யம் நானு யிருக்கின்றேன் என்று அறிய வில்லை", என்று தெரிகிறது. எங்ஙனம்? இத் தேகத்தினிடத்தில் அசங்கனு யிருக்கின்றனனே, அங்ஙனமே, எல்லாப் பிராமணர் முதலியோர் சரீரத்தினிடத்தும், வீட்டினிடத்தும் அசங்கனு யிருக்கின்றேன். தன்னைத் தன் தேஹத்தினிடத்தில் பிராஹ்மண னுக அங்கிகரிக்கின்றனன். எனையர் 'பிராஹ்மணன்' என்பது வர்ணத்திற்குப் பெய ராம். தனது சிதாநந்தத் தன்மை, அசங்கத் தன்மை, ஆசிரமத் தன்மையினைத் தியாகஞ் செய்து, வர்ண தர்மத்தினை யுடைய பிராஹ்மண தர்மத்தினை அங்கீகரித் தனன். ஆத்மாவின் சொரூபத்தினை அறிய வில்லை. சொரூபமோ (ஊர்க் குருவி) பக்ஷி கழுதைகளுக்கும் கெட வில்லை. வியவகாரம் மாத்திரம் கெட்டிருக்கின்றது. அவ் வியவகார மாத்திரத்தினையே திருத்தல் வேண்டும். எங்ஙனம்? ஆகாசம் சாக்கடை ஜலத்திலும் அசங்கமா யிருக்கின்றது.

பிரசிநம்:— இதில், பிரமாணம் யாது?

**உத்தரம்:—** மநிஷா பஞ்சகத்தில் சண்டாள ரூபத்தினைத் தாரணஞ் செய்து, ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகளிடத்தில் ஆக்ஷேபஞ் செய்யப்பட்டது. சிவன் பிரமாணமுங் கூறியிருக்கின்றனர்.

**किं गंगांवुनि विंवितेंवरमणौ चंडालवाटीपयः—**
**पूरेवांतरमस्ति कांचनघटीमृत्कुंभंयोर्वांवरे ।**
**प्रत्यग्वस्तुनि निस्तरंगसहजानंदाववोधांवुधौ —**
**विप्रोयंश्वपचोयमित्यापिमहान्कोयं विभेदभ्रमः ॥ ४ ॥**

"கிம் கங்காம்புநி பிம்பிதேம்பரமணௌ சண்டாள வாடீபய:— பூரேவாந்தரமஸ்தி காஞ்சநகடீமிருத்கும்பயோர் வாம்பரே, பிரத்யக்வஸ்துநி நிஸ்தரங்கசகஜாநந்தாவபோதாம்புதௌ – விப்ரோயம் ஸ்வபசோயமித்யபி மஹாந் கோ யம் விபேதப் பிரம:" (மநிஷா பஞ்சகம் 4)

இதன் பொருள்:— கங்கா ஜலத்தில் சூரியப் பிரதிபிம்பம் உண்டாவதனாலும், அங்ஙனமே, சண்டாளனது பானையில் தோல் கழுவுவதனால் துர்க்கந்தத்தோடு கூடியிருக்கும் ஜலத்தில், பிரதிபிம்பம் உண்டாவதனாலும், சூரியனுக்கு அற்பப் பேதமாவது உளதா? அற்பமும் பேதமில்லை. அல்லது, சுவர்ணக் குடத்திலும், மட் குடத்திலும், அவச்சின்ந ஆகாசத்தில் எப் பேதமுளது? ஒரு பேதமுமில்லையாம். அதனால், பிரகாசக ரூபமான பரமாத்ம வஸ்து, சம்ஸார ரூப தரங்கமின்றிய சுவாபாவிகமான ஆநந்த ரூப சமுத்திரத்தில், "இவன் பிராஹ்மணன், இவன் சண்டாளன், இவன் மஹான்" என்று விசேஷமாக எப் பேதம் உளது? அற்பப் பேதமும்

இல்லை யாம். இவ் வாறு, ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் அங்கிகரித் திருக்கின்றனர்.

பிரசிநம்:— இதில், ஒரு திருஷ்டாந்தம் கூறுவீராக.

உத்தரம்:— திருஷ்டாந்தங் கூறப்படுகின்றது. எங்ஙனம்? ஒரு புருஷன் மூர்த்தியின் இச்சையினால், காய்ந்த மரத் தூணைத் தச்சனிடத்தில் கொண்டு போய், "இதனை மூர்த்தி யாகச் செய்து கொடு" என்று கேட்டனன். அதற்கு அந்தத் தச்சன், தூணைத் தோண்டி மூர்த்தி செய்து கொடுத் தனன். மூர்த்தியின் அதிக மான மரத்தினை வெட்டிவிட்டனன். அங்கங்கள் கெடு மாறு செய்ய வில்லை. கேட்ட கூலியைக் கொடுத்தான்.

இவ் வாறு தார்ஷ்டாந்தங் கூறப்படுகின்றது. முமுக்ஷு ரூப புருஷன் மூர்த்தி ரூப சொரூபத்தின் இச்சையினால், சங்காத (பஞ்சீகரண ஆத்மக சரீர) ரூப மரக் கட்டை யினைத் தச்ச னாகிய குருவி னிடத்தில் கொண்டு சென்றனன். அந்தத் தச்சன் ரூப குருவும், விசார ரூப வாளால் தேஹேந் திரிய பிராண மந ரூப அதிக மான கட்டைகளை, வெட்டுதல் ரூப நிவிர்த்தியினைச் செய்தனர். மூர்த்தி ரூப சிதாநந்தத் தன்மையினை உபதேசஞ் செய்தனர். அங்க நாச ரூப * இருத்தல் மாத்திரத்தினை நாச மடையச் செய்ய வில்லை. கூலி ரூப குரு தக்ஷிணை கேட்கப்பட்டது. அந்தக் குரு தக்ஷிணை

* இருத்தல், உண்டாதல், விருத்தி யாதல், பரிணம மடை தல், குறைதல், நாச மடைதல், என்பன சரீரத்தின் ஆறு விகாரங்க ளாம்; இதில் இருத்தல் என்னும் விகாரம்.

யில், அபிமாந ரூப தநம் கொடுக்கப்பட்டது. இதனால், ஒன்றனது ரூபமுங் கெட வில்லை. வியவகாரம் கெட்டு விட்டது. இதனின், விபரீத தர்ம முடைய புருஷன் உபயப் பிரஷ்டன் ஆகின்றான்.

பிரசிநம்:— உபயப் பிரஷ்ட னாகின்றான் என்று எவ்வாறு கூறினீர்? இதில், பிரமாணம் யாது?

உத்தரம்:— இதில், ஸ்மிருதி பிரமாண மாம்.

**गृहकर्मसमासक्तं अहं ब्रह्मेति वादिनं ।**
**कर्मब्रह्मोभयभ्रष्टं तं त्यजेदंत्यजं यथा ॥**

"கிருஹ கர்ம சமாசக்தம் அஹம் பிரஹ்மேதி வாதிநம், கர்மப் பிரஹ்மோபயப் பிரஷ்டம் தம் த்யஜேதந்தியஜம் யதா".

இதன் பொருள்:—எவனுக்குக் கிரஹ வியவகார (கர்ம) த்தில் ஆசை யிருக்கின்றதோ, 'நான் பிரஹ்மமா யிருக்கின்றே' னென்று கூறுகின்றனனோ, அப் புருஷன், கர்மம் பிரஹ்மம் என்னும் இரண்டினும் பிரஷ்ட னாயினன் என்று உணர்க. அவனைச் சண்டாளனைப் போல் விடுக.

பிரசிநம்:— ஞாநம் உண்டாயின் சங்காதம் எங்குச் செல்லுகின்றது?

உத்தரம்:— அதே சைதந்யத்தில் லய மடைகின்றது.

பிரசிநம்:— சைதந்யத்தில் இவ் வாறாய மலிநம் லய மாகு மாயின், சைதந்யம் எவ் வாறு சுத்த மாம்?

**உத்தரம்:—** அஞ்ஞாந காலத்தில், சிதாநந்தத் தன்மை, கர்த்ருத் தன்மை, போக்த்ருத் தன்மை முதலியன, சங்காதத்தில், மறைந்திருக்கின்றன. ஞாநம் உண்டாயின், கர்த்ருத் தன்மை, போக்த்ருத் தன்மை முதலிய சங்காதங்கள் சிதாநந்தத்தில் லய மடைகின்றன.

**பிரசிநம்:—** இதில், பிரமாணம் யாது?

**உத்தரம்:—திருஷ்டாந்தங் கூறப்படுகின்றது:-** எங்ஙனம்? ஒரு புருஷன் மரத்தினால் யானை செய்தான். அந்த மரத்தினை முன்னர் ஒருவரும் யானை என்று கூறிய தில்லை. காரணம் யா தெனின், * யானை மரத்தில் லயமா யிருந்தது. இப்பொழுது, அந்த யானையை ஒருவரும் மரம் என்று கூறுவது இல்லை. எல்லா மரமும் யானையில் லயமா யிருக்கின்றன?

**இப்போழுது, தார்ஷ்டாந்தங் கூறப்படுகின்றது:—** சாதந சதுஷ்டயத்தோடு கூடிய முமுக்ஷு ரூப புருஷன், சங்காத ரூப மரத்தினைத் தோண்டிச் சிதாநந்த ரூப யானையை வெளிப்படுத்தினன். முன்னர், சங்காத ரூப மரத்தினை, 'யானை ரூப சைதந்ய' மென்று ஒருவரும் கூறின தில்லை. இப்பொழுது சிதாநந்த ரூப யானையில், கர்த்ருத் தன்மை, போக்த்ருத் தன்மை முதலிய சங்காத ரூப மரம் லய மாய் விட்டது. இதனால், 'மர ரூப சங்காத' மென்று ஒருவருங் கூறுவ தில்லை. எல்லா ஞாநி புருஷரும், யானை ரூப சிதாநந்த மாகவே கூறுகின்றனர்.

---

* திரு மந்திரம் (8) தந்திரம் 2290. "மரத்தை மறைத்தது மாமத யானை, மரத்தின் மறைந்தது மாமத யானை, பரத்தை மறைத்தது பார்முதற் பூதம், பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே" என்னும் செய்யுளானும் உணர்க.

பிரசிநம்:— ஆயின், சிதாநந்தத்தின் அடைவு, கிருத்திரி ம மா (கர்த்தாவினல் செய்யப்பட்ட தா) யிற்று.

உத்தரம்:— கர்த்தாவினல் செய்யப்பட்ட தன்றும். அடைந்தது போன்று கூறப்படுகின்றது. எங்ஙனம்? ஒரு புருஷ னுடைய கழுத்தில் மாலை இருந்தது; அது மறக்கப் பட்டது. அப் புருஷன், அதனைத் தேடினன். அப் பொழுது ஒரு புருஷன், 'அது உன்னுடைய கழுத்தில் இருக்கின்ற' தென்று கூறினன். அவன் மாலையினைப் பார்த்து பிரசந்ந மடைந்தனன். பின்னர், இவனைப் பார்த்து, ஒரு புருஷன், 'உனது மாலை தவறிப் போயிருந்தது. அதனை அடைந் தனையா' வென்று கேட்டனன். அப் பொழுது, அவன் 'அடைந்தேன்' என்று கூறினன். ஈண்டு, 'அடைந்தேன்' என்று கூறியது, அடைந்தது போன்றதே யாம். இவ் வாறே, தார்ஷ்டாந்தத்தில், 'சிதாநந்தத்தின் அடைவு போன்றே, அடைவு கூறப்பட்டது' என்று அறிக.

பிரசிநம்:— எவனுக்கு இவ் வாறுய ஞாநம் உண்டா யிற்றோ, அவன் தனது இச்சையின் பிரகாரம் இருப்பன். இதில், கீதையின் வசநம் பிரமாண மாம்.

**यस्य नाहंकृतो भावो बुद्धिर्यस्य न लिप्यते ।**
**हत्वापि स इमाँल्लोकान्न हंति न निबध्यते ॥**

**भगवत् गीता (१८-१७॥)**

"யஸ்ய நாஹங்கிருதோ பாவோ புத்திர் யஸ்ய ந லிப் யதே, ஹத்வாபி ஸ இமால் லோகாந் ந ஹந்தி ந நிபத்யதே" (பகவற் கீதை 18—17.)

இதன் பொருள்:— எவனுக்கு அஹங்காரத் தன்மை யில்லையோ, எவனது புத்தி விஷயங்களில் சம்பந்தப்படுவ தில்லையோ, அந்தப் புருஷன், இந்தலோகத்திலுள்ளவர்க் கொன்றும், ஆத்ம திருஷ்டியினுல் கொல்ல வில்லை. அக் கர்மங்களின் பலன்களால் பந்தத்தினை அடைவதும் இல்லை.

ஈண்டு சேஷரது வசநமும் பிரமாண மாம்.

**हयमेधसहस्राण्यथ कुरुते ब्रह्मघातलक्षाणि ।**
**परमार्थविन्न पुण्यैर्न च पापैः स्पृश्यते विमलः ॥**

"ஹயமேதசகஸ்திராண்யத குருதே பிரஹ்ம காத லக்ஷாணி, பரமார்த்த விந் ந புண்யைர் ந ச பாபை: ஸ்பிரிஸ்யதே விமல:"

இதன் பொருள்:— ஞாநி ஆயிரம் யாகஞ் செய்யினும், லட்சம் பிராமணர்களைக் கொல்லினும், மாயா ரூப மல மின்றியவ னுதலின், அந்தப் புண்ணிய பாவங்களினுல், ஸ்பரிசிக்கப்படுவ தில்லை. அவனைப் புண்ய பாவங்கள் பற்றுவ தில்லை என்பது பொருளாம்.

உத்தரம்:— நீ கூறியது சத்திய மாம். ஆனுல், ஈண்டு சாஸ்திரங் கூறுகின்றது. அதனையுங் கேட்பாயாக.

**तेषां वचनानां विद्वत्स्तुतिपरत्वेन तत् कर्तव्यमित्यत्र तात्पर्याभावात् ॥**

"தேஷாம் வசநாநாம் வித்வத் ஸ்துதிபரத்வேந தத் கர்த்தவ்ய மித்யத்ர தாத்பர்யாபாவாத்"

இதன் பொருள்:— அவ் வசநங்கள், ஞாநியின் ஸ்துதியில் தாத்பர்ய மென் றுணர்க. காரணம் எ னெனின், அவ் வசநத்திற்கு, அசுவமேத யஞ்ஞாதிகளைச் செய்ய வேண்டு மென்பதி லாவது, பிரஹ்ம ஹத்தி முதலியன செய்ய வேண்டு மென்பதி லாவது தாத்பர்ய மில்லை. அவ் வசநங்களால், ஞாநியின் ஸ்துதி செய்யப்படுகின்றது.

ஆசாரியர்களா லது கூறப்பட்டிருக்கின்றது.

**अधर्माज्जायतेऽज्ञानं यथेष्टाचरणं ततः ।**
**धर्मकार्यं कथं तत्स्याद्यत्र धर्मोऽपि नश्यति ॥ (४-६३ ॥)**

"அதர்மாஜ் ஜாயதே ஞாநம் யதேஷ்டாசரணம் தத:, தர்மகார்யங் கதம் தத் ஸ்யாத் யத்ர தர்மோபி நச்யதி" (நைஷக் கர்மய சித்தி 4—63.)

இதன் பொருள்:— அதர்மத்தினல் அஞ்ஞாந முண்டாகின்றது. அஞ்ஞாநத்தினல் இச்சையின்படி செல்லுகின்றான். யாண்டுத் தர்மமும் நாச மாகின்றதோ, ஆண்டுத் தர்ம கார்யம் எவ் வாறு உண்டாம்.

நைஷ்க் கர்ம்ய சித்தியிலும் கூறப்பட்டிருக்கின்றது.

**बुद्धाद्वैतसतत्त्वस्य यथेष्टाचरणं यदि ।**
**शुनां तत्त्वदृशां चैव को भेदोऽशुचि भक्षणे ॥ ४-६२ ॥**

"புத்தாத்வைதசதத்வஸ்ய யதேஷ்டாசரணம் யதி, சுநாம் தத்துவதிருசாம் சைவ கோ பேதோ சுசி பக்ஷணே" (நைஷ்க் கர்ம்ய சித்தி 4—62.)

இதன் பொருள்:— அத்வைத ஆத்ம தத்துவத்தினை உணர்ந்த புருஷனுக்கு, யதேஷ்டாசரண முண்டா மாயின், இச்சையின் படி நடப்ப னாயின், நாய்க்கும், ஞாநிக்கும் எச்சில் முதலிய வற்றைப் புசிப்பதில் எப் பேத மிருக்கின்றது, ஒரு பேதமு மின்றாம்.

இன்னும், நைஷ்க் கர்ம்ய சித்தியில் கூறப்பட்டிருக் கின்றது.

**रागो लिंगमबोधस्य चित्तव्यायामभूमिषु ।**
**कुतः शाद्वलता तस्य यस्याग्निः कोटरे तरोः ॥ ४-६७ ॥**

"ராகோ லிங்கமபோ தஸ்ய சித்த வியாயாம பூமிஷு, குதः ஸாத்வலதா தஸ்ய யஸ்யாக்நி: கோடரே தரோ:"
(நைஷ்க் கர்ம்ய சித்தி 4—67.)

இதன் பொருள்:— சித்தத்தினை விரிக்கும் பூமி யாய சப்த ஸ்பரிச ரூப ரச கந்தாதிகளினிடத்தில் பிரியம் வைத்தல், அஞ் ஞாநத்தின் சிந்ந மாம். ஈண்டு திருஷ்டாந்தங் கூறப்படு கின்றது. விருக்ஷத்தி (ன் வேரி) னடியில் நெருப்பு இருக்கு மாயின், அதற்குப் பசுமை யேது? ஆதலினால், எந்தச் சாதநத் தினால் ஞாந முண்டாயிற்றோ, அந்தச் சாதநம் சொரூப மாகவே இருக்கின்றது.

பிரசிநம்:— இதற்குப் பிரமாணம் யாது?

உத்தரம்:— ஸ்மிருதியில் கூறப்படுகின்றது.

**"तदानीममानित्वदीनि ज्ञानसाधनानि अद्वेष्टृत्वादयः सद्गुणाश्चालंकारवदनुवर्तते ॥"**

"ததாநீம் அமாநித்வாதிநி ஞாந சாதநாநி அத்வேஷட்ருத்வாதய: சத்குணச்சாலங்காரவததநுவர்த்தந்தே"

இதன் பொருள்:— அந்த ஞாந அவஸ்தையில், ஞாநத்தின் சாதநங்களான அமாநித்வாதிகளும், த்வேஷ மின்மை முதலிய சிரேஷ்ட குணங்களும் ஆபரணம் போன்று இருக்கின்றன.

இதில், வார்த்திகக்காரருடைய சம்மதியுங் கூறப்படுகின்றது.

**उत्पन्नात्मावबोधस्य अद्वेष्टृत्वादयो गुणाः ।**
**अयत्नतो भवंत्यस्य न तु साधन रूपिणः ॥**

"உத்பந்நாத்மாவபோதஸ்ய அத்வேஷட்ருத்வாதயோ குணா:, அயத்நதோ பவந்த்யஸ்ய ந து சாதந ரூபிண:"

இதன் பொருள்:— ஆத்ம ஞாந முண்டான புருஷனுக்குத் த்வேஷ மின்மை முதலிய குணங்கள் (பகவற் கீதையில் கூறப்பட்ட) சாதநங்க ளின்றியும், யத்ந மின்றியும், அவனுக்கு உண்டாகின்றன. (அவை சாதந ரூபங்க ளன்று, சாத்திய ரூபங்க ளாம்.)

10. அஞ்ஞாநி ஞாநிகளின் நிர்ணயத்தில் யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 11. விராட்டின் நிர்ணயத்தில் யுக்தி.

இப் பொழுது, விராட்டின் நிர்ணயத்தில் பதினொன்றாவது யுக்தி கூறப்படுகின்றது.

சித்தாந்தி :— விசாரித்து யுக்தி கூறுகின்றனர். விராட் ரூபம் இவ் வாறு இருக்கின்றது:— எவரது ஒவ் வொரு ரோம மாகிய கிணற்றில், அநந்தங் கோடி பிரஹ்மாண்டங்கள் உண்டா யிருக்கின்றன. ஒன்றோ டொன்று பொருந்து வதில்லை. ஆனால், சைதந்யத்தின் ஏக தேசத்தில் கற்பிதமா யிருக்கின்றன. ஏனெனின், மாயையின் காரியங்க ளாம். இதனால், விசாரத்தினால் விராட்டின் அஞ்ஞாந சகித அபாவ முண்டாமிடத்துப் பூரணமாய்ப் பெரிதா யுள்ள சுத்த சைதந்ய மிருக்கின்றது.

பிரசிநம்:— இதிற் பிரமாணம் கூறுக. பெரிது எவ் வாறுயது? சைதந்யம் எவ் வாறுயது?

உத்தரம்:— சுருதி கூறுகின்றது.

**महतो महीयान्**

"மஹதோ மஹீயாந்"

இதன் பொருள்:— பெரிதினும் பெரிது.

ஸ்மிருதியுங் கூறுகின்றது.

**एको विशुद्धबोधोहमिति निश्चय वह्निना ।**
**प्रज्वाल्याज्ञानगहनं वीत शोकः सुखी भव ॥**

"ஏகோ விசுத்தபோதோஹம் இதி நிச்சய வஹ்நிநா,
பிரஜ்வால்யாஜ்ஞாநகஹநம் வீத சோக: சுகீ பவ."

இதன் பொருள்:— ஏ சிஷ்யனே! நீ "நான் ஒரு விசேஷ சுத்த ஞாந சொரூபனா யிருக்கின்றேன்" என்று நிச்சயஞ்

செய்து, அந்த நிச்சய ரூப அக்கினியினுல், அஞ்ஞான ரூப வநத்தினை எறித்துத் துக்க மின்றிச் சுகி யாவாய்.

**பிரசிநம்:—** நீர் சைதந்யம் மஹத்தினு மஹத் தென்று கூறினீர், அது பொருந்தாது. காரணம் என்னை எனின், எங்ஙனம்? சர்ப்பம் ரஜ்ஜுவினை மறைக்கின்றது. ஆனுல், ரஜ்ஜுவின் சமாநமே யாம். அந்த ரஜ்ஜு சர்ப்பத்தினும் பெரிதா மாயின், (அதன்) ஏக தேசத்தில் சர்ப்பமும் பார்க்கப் படும். எஞ்சிய ரஜ்ஜுவும் பார்க்கப்படும். நீர் இருளின் திருஷ்டாந்தத்தினை அங்கீகரிக்காவிடின், பிரகாசத்தினையுங் கூறுகின்றேன். எங்ஙனம்? (ரூபா) வெள்ளி எல்லாக் கிளிஞ்சலையும் மறைக்கின்றது. இதனுல், மஹத்தினு மஹத்துத் தன்மை பொருந்துவ தில்லை. ஆகவின், விராட்டின் சமாநமே யாம்.

**உத்தரம்:—** அடே வாதி கேட்பாயாக. இந்தப் புத்திக்கு நேரே வா. எனது அபிப்பிராயத்தினை நீ அறிந்தாய் இல்லை. நான் சித்தாந்தத்தினைக் கூறினேன். நீ அத்தியாரோபத்தில் சங்கை செய்தாய். ஆயினும் கேட்பாயாக, எங்ஙனம்? ரஜ்ஜுவின் அஞ்ஞான காலத்தில், ரஜ்ஜுவின் அள வாகச் சர்ப்பம் விளங்குகின்றது. ஆனுல், சர்ப்பம் இருப்ப தில்லை. காரணம் என்னை எனின், ரஜ்ஜுவின் அஞ்ஞாநம் நஷ்ட மாவதனுல், எல்லாம் ரஜ்ஜு வாகவே இருக்கின்றது. சர்ப்பத்தின் துண்டமும் இருப்ப தில்லை. அங்ஙனமே, ஆத்மாவின் அஞ்ஞானத் தினுல் எல்லாம் மறைந் திருப்பது போன்று விளங்குகின்றன. அஞ்ஞாநம் நஷ்ட மாவதனுல், பூர்ண ஆத்மாவே மிச்ச மாகின்றது. விராட்டின் மூளையு மிருப்ப தில்லை. எங்ஙனம்?

ரஜ்ஜுவினிடத்தில், சர்ப்பம் கற்பிதமோ, அங்ஙனமே, ஆத்மாவினிடத்தில், விராட்டுக் கற்பித மாம். வேறு வகைத் தாகவும் உத்தரம் கூறுகின்றோம். எங்ஙனம? குடத்தில் நிறைந்திருக்கும் ஜலத்தில், சிறிது அழுக்கு (உவர்மண்) எல்லா ஜலங்களையு மலின மாக்குகின்றது. ஆனல், ஜலத்திற்குச் சமான மாக அஃது இருப்ப தில்லை. ஞான ரூப நிர்மலத் தன்மையினைப் போட்டு விடின், அஞ்ஞான ரூப அழுக்கு (உவர்மண்) நிவிர்த்தியாய் விடும். நிர்மல ஜல ஸ்தான மாய சுத்த சொரூபமே இருக்கின்றது.

**பிரசினம்:**— இவ் வாறு அங்கிகரிக்கின் த்வைத முண்டாம். ஆத்மா ஒன்று இருக்கின்றது, ஞானம் ஒன்று இருக்கின்றது. அதனல், சித்தாந்தம பொருந்துவது இல்லை.

**உத்தரம்:**— அடே தம்பி கேட்பாயாக. அத்வைதமே சித்தாந்த மாயிற்று. அஞ்ஞான ரூப அழுக்கை, ஞான ரூப நிர்மலம், நிவிர்த்தி செய்து தேற்றும் கொட்டை பிரஹ்ம ரூப ஜலத்தில், தானும் லய மடைகின்றது.

**11. விராட்டின் நிர்ணயத்தில் யுக்தி முற்றுப் பெற்றது.**

---

## 12. சட் சாஸ்திர வாதங்களின் யுக்தி

இப் பொழுது, சட் சாஸ்திர வாதங்களின் பன் னிரண்டாவது யுக்தி கூறப்படுகின்றது.

ஒரு காலத்தில் * சட் சாஸ்திர வாதிகளின் சபை கூடிற்று. அதில், வேதாந்தி, 'சார மான வஸ்து யா' தென்று

---

* 1. வேதாந்தி, 2. பாதஞ்சலர், 3. நையாயிகர், 4. மீமாம்சகர், 5. வைசேஷிகர், 6. சாங்கியர் இவர் ஆறு சாஸ்திரங்களின் வாதிக ளாம்.

கேட்டனன். அப்பொழுது பாதஞ்சல வாதி, "நீரோத பூமியில், சித்தத்தினை லயஞ் செய்து, ஜீவாத்மாவினைப் பரம சுகத்தினை அநுபவிக்கச் செய்வதே சார மாம்" என்று கூறினன்.

**பிரசிநம்:—** உனது மதத்திற்குச் சாதநம் யாது? மோக்ஷம் யாது? என்று வேதாந்தி கேட்டனன்.

**உத்தரம்:—** * யமம் முதல் நிர்விகல்ப சமாதி பரியந்தமா யுள்ள எட்டு அங்கங்கள் சாதநங்க ளாம். † பஞ்சக் கிலேசங் களின் நிவிர்த்தியினை மோக்ஷம் என்று கூறப்படுகின்றது.

---

* யமம், நியமம், ஆசநம், பிராணாயாமம், பிரத்யாகாரம், தாரணை, தியாகம், சமாதி என்பன வாம். இவற்றின் லக்ஷணம் அந்திம யுக்தியில் கூறப்படும்.

† "அவித்யா அஸ்மிதா ராக த்வேஷ அபிநிவேசங்கள் கிலேசங்கள்" என்பது 2—3 பதஞ்சலி சூத்ரம்.

1. அவித்தை, "அநித்ய அசுசி துக்க அநாத்மாக்களில், நித்ய சுசி சுக ஆத்ம கியாதி அவித்தை" என்பது 2—5 பதஞ்சலி சூத்ரம்.

தேவர்களின் ஆயுஷ் ஒரு கற்ப பரியந்த மாம், அதிக மின்றும். அங்ஙன மாயினும், அமர (மிருத்யு வின்றிய) நாம மாத்திரத்தினல், அநித்ய தேவ சரீரத்தில், நித்தியத் தன்மையின் பிராந்தி உண்டாகின்றது. பின்னும், அதனல், தேவத் தன்மை யினை அடைதற் பொருட்டு, கர்மத்தினல் பத்தன் ஆகின்றான். ஸ்திரீ முதலிய அபவித்திர சரீரத்தில், பவித்திரத் தன்மையின் பிராந்தியினல் பத்தன் ஆகின்றான். பரிணாமத்தில் துக்கத் தினைக் கொடுக்கும் போகத்தில், சுகத் தன்மைப் பிராந்தி; ஆத்மாவினின்றும் வேறான புத்தி முதலியவற்றில், ஆத்ம புத்தி உண்டாதல். இவை அவித்தை யாம்.

அப் பொழுது நையாயிகன், ஜீவந் ஜட மென்று கூறினன்.

**பிரசிநம்:—** "எவ் வாறு ஜீவன் இருக்கிறுன்" என்று பதஞ்சல வாதி கேட்டனன்.

---

2. **அஸ்மிதை,** "திருக் தர்சந சக்திகளின் ஏகத் தன்மையே அஸ்மிதை" என்பது 2—6 பதஞ்சலி சூத்ரம்.

திருக் சக்தி - புருஷனும். திருசியதே - பொருளால் - அநுபவிக்கப்படுகின்றது. தர்சந சக்தி - புத்தி யாம். (ஈண்டு சக்தி சப்தம் யோக்கியத் தன்மையின் போதக மாம்.) போக்திருத் தன்மை, போக்கியத் தன்மைகளின் யோக்கிய மாவ தான, பரஸ்பரம் அத்தியந்தம் பிந்ந மான திருக் திருசியங்களின், அவித்தையினுல் செய்யப்படும் ஏகத் தன்மை (தாதாத்மியத்துக்கு, அல்லது ஏகீபாவத்து) க்கு அஸ்மிதை என்று கூறுவர்.

பிரஹ்ம வேத்தாக்கள், இந்த அஸ்மிதையினை 'ஹிருதயக் கிரந்தி' என்கின்றனர்.

3. **ராகம்,** "சுக அநுசயீ ராகம்" என்பது 2—7 பதஞ்சலி சூத்ரம்.

சில சுகத்தின் அநுபவம் உண்டாகின்றது. மீண்டும் அந்தச் சுகத்தின் ஸ்மிருதி உண்டாய், அது போன்ற அந்நிய சுகத்தில், அல்லது சுகத்தின் சாதநத்தில், உண்டாம் திருஷ்ணை (உத்கட இச்சை) ராகம் என்று அறிக.

4. **துவேஷம்,** "துக்க அநுசயீ துவேஷம்" என்பது 2—8 பதஞ்சலி சூத்ரம்.

துக்கத்தினை அநுபவம் செய்த புருஷனுக்குத் துக்க ஸ்மரணம் உண்டாகிறது. பின்னர், துக்கங்களிலும், துக்கத்தின் சாதநங்களிலும் உண்டாம் குரோதம் துவேஷம் என அறிக.

**உத்தரம்:—** ஜட மாயும், விபு வாயு மிருக்கின்றான் என்றனன்.

**பிரசிநம்:—** பதஞ்சல வாதி கூறுவதும், நீ கூறுவதும், பொருந்த வில்லை. காரணம் யா தெனின், ஜடமா யிருப்பது, கர்த்தாவும், போக்தாவும், வியவு மாவது எவ் வா றாம்?

---

5. அபிநிவேசம், "ஸ்வ ரச வாஹீ வித்வா னுயினும், ததா ரூடம் அபிநிவேசம்" என்பது 2—9 பதஞ்சலி சூத்ரம்.

வித்வான், அல்லது மூர்க்கன் ஆகிய எல்லாப் பிராணிகளுக் கும், மிருத்யுவினின்றும் உண்டாம் பயம் அபிநிவேசம் என அறிக.

எங்ஙனம்? மூர்க்கனுக்கு, "நான் சர்வ காலமும் இருக்க வேண்டும்" என்னும் இச்சையினுல், தனக்கு, மேல் உண்டாம் நாசத்தினுல், உண்டாம் பயம் பிரசித்தமே யாம்.

அங்ஙனமே, வித்வானுக்குமே இப் பயம் பிரசித்த (பிரத்யக்ஷ) மாகப் பார்க்கப்படுகின்றது. காரணம்? ஸ்வ ரச வாஹீ (பூர்வ ஜந்மத்தில், அநேக முறை உண்டான மரண துக்கத்தின் அநுபவத்தினுல், உண்டான வாசனையி (சம்ஸ்காரத்தி)ன் சமுதாயம் ஸ்வ ரச மாம். அந்த ஸ்வ ரசத்தினுல், வஹநம் - ஒழுகுவது, பிரவாக ரூபத்தால் இருப்பது என்பது பொருள். இதனுல் ஸ்வ ரச வாஹீ) என்று கூறப்படுகின்றது. இந்த அபிநிவேச ரூப பயத்தின் ஞானம் உண்டாயின், ஆத்மா தேஹத்தின் பிந்நமாம். இதனை பாஷ்யத்தில், வேத வியாசர் பிரசங்கத்தால் அறிவித்திருக்கின்றனர். "எங்ஙனம்? பாலகன் உண்டானபின் அவனது மரணத்தின் பயம் உண்டாகின்றது. இது பிரசித்த மாம். அப் பயம் முன் மரணத்தின் ஸ்மரண மின்றி உண்டாக மாட்டாது." என.

**உத்தரம்:**— அடே வாதி சிரவணஞ் செய். பூர்வ கர்மம் மநத்தினைப் பிரேரிக்குங் கால், மநதிற்கும், ஆத்மாவிற்கும் சையோகம் உண்டாகின்றது. அப்போது ஆத்மா ஞாந குணம் உடையதாக ஆகின்றது. மநமின்றி ஆத்மா ஜடமாம். ஞாந குணம் உடையதாக உண்டாகும் பொழுது, கர்த்தா, போக்தா விபு வாகின்றது.

**பிரசிநம்:**— பதஞ்சல வாதி கூறுவதில், உனது மதம் யாது? மோக்ஷம் யாது?

---

இவ்வவித்தை முதலிய ஐந்து கிலேசங்களை அநுக்கிரமமாக, 'தமம் - மோஹம் - மஹா மோஹம் - தாமிசிரம் - அந்த தாமிசிரம்' என்று கூறுகின்றனர்.

(அவற்றுள், அவ்யக்தம் மஹ தத்வம் அஹங்காரம் பஞ்ச தந்மாத்திரைக ளாகிய எட்டு அநாத்மாக்களில், ஆத்ம புத்தி அவித்தை யாகிய **தம** மாம். அணிமா முதலிய எட்டு ஐசுவரியங்களில், "அணுவா யிருக்கிறேன், மஹானு யிருக்கிறேன்" என்னும் தாதாத்ம்யம் **மோஹ** மாம். அந்த மோஹத்தினுல், திவ்ய அதிவ்ய பேதத்தினுல், சப்தம் முதலிய பத்து விஷயங்களில், ராகம், **மஹா மோஹ** மாம். சில ஐசுவரியம் நாச மாகில், அதன் நிமித்தகமாய் பத்து விஷய போகங் கிடைக்காம லிருக்கும் போது, பதினெட்டு இஷ்ட விநாசத்தின் துவேஷம், **தாமிசிர** மாம். இந்தப் பதினெட்டு இஷ்டத்தின் நாசத்தால் உண்டாம் பயம் **அந்த தாமிசிர** மாம்.

ஆகவே, சாங்கிய காரிகை,

**भेदस्तमसोऽष्टविधो मोहस्य च दश विधो महामोहः ।**
**तामिस्रोऽष्टादशधा तथा भवत्यन्धतामिस्रः ॥ ४८ ॥**

இவ்வாறு கூறுகின்றது.

**உத்தரம்:—** * சம முதலிய சாதநங்களினுல் ஈசுவரனை சாக்ஷாத்காரஞ் செய்து, சுகம் அடையப்படுகின்றது. அப்பொழுது ராஜா புரோகிதர்கள் போன்று ஆத்மா சுகத்தினை

* சமம் - தமம் - உபரதி - திதிக்ஷை - சமாதாநம் - சிரத்தை என்பவற்றின் லக்ஷணங்களைக் கிரமமாகக் கூறுவாம்.

1. **சமம்**, "சிரவண முதலியவற்றின் அந்நிய விஷயங்களினின்றும் மநத்தின் நிக்கிரகம்" என்பது, ஈசுவர விஷய மான சிரவண மநந நிதியாசநங்களி னின்றும் வேருன, அந்ய விஷயங்களினின்றும் மநத்தினை திருப்புவது **சம** மாம்.

2. **தமம்**, "பாஹ்ய இந்திரியங்களை அதன் வேருன விஷயங்களினின்றும் நிவிர்த்தி செய்வது" என்பது. சுரோத்திரம் முதலிய வெளி இந்திரியங்களை, ஈசுவர விஷய மான சிரவணுதிகளின் வேறு விஷயங்களி னின்றும் விலக்குவது **தம** மாம்.

3. **உபரதி**, "நிவிர்த்திக்கப்பட்ட இவற்றினை அதன் அந்ய மான விஷயங்களி னின்றும் உபராமம் அடைவது உபரதி" என்பது. அல்லது, "விஹித கர்மங்களை விதியாக விடுதல்" என்பது. ஈசுவர விஷயத்தி னின்றும் வேருன, விஷயங்களினின்றும் விலக்கப்பட்ட பாஹ்ய இந்திரியங்களைத் தமநம் (அடக்கல்) செய்தல், அல்லது, விதி வாக்கியங்களில் விதித்த கர்மங்களை விதியாக விடுதல் **உபரதி** ஆம்.

4. **திதிக்ஷை**, "சீத உஷ்டண முதலியவற்றின் சஹித்தல் தன்மை" என்பது. சீதம் உஷ்டணம் சுகம் துக்கம் என்பனவற்றைப் பொறுத்துக் கொள்ளுதல் **திதிக்ஷை** யாம்.

அடைகின்றது. இருபத்தொரு துக்கத்தின் நிவிர்த்தி மோக்ஷம் எனப்படுகின்றது. இஃதே சாரமாம்.

பிரசிநம்:— இருபத்தொரு துக்கத்தினை நிவிர்த்தித்தல் வேண்டும். அத் துக்கங்கள் யாவை?

உத்தரம்:—

"शरीरं षडिंद्रियाणि षड्विषयाः
षड्विषयज्ञानानि सुखं दुखं च ॥" इति.

"சரீரம் சடிந்திரியாணி சட் விஷயா:
சட் விஷய ஞாநாநி சுக துக்கஞ் ச" இதி.

இதன் பொருள்:— 1. சரீரம், 2. சுரோத்ரம், 3. த்வக்கு, 4. சக்ஷு, 5. ரசனை, 6. நாசிகை, 7. மநம், 8. சப்த, 9. ஸ்பர்ச, 10. ரூப, 11. ரச, 12. கந்தம், 13. விஷயங்களை இந்திரியங்களுக்கு அடைதல் செய்விப்பதான மநத்தின் விஷயம், 14. சுரோத்ர ஞாநம், 15. துவாச ஞாநம்,

---

5. சமாதாநம், "நிக்கிரகிக்கப்பட்ட மநத்தினை சிரவண முதலியவற்றிலும், அதன் அநுகுண விஷயத்திலும் சமாதி சமாதாநம்" என்பது. ஈசுவர விஷயமான சிரவண முதலியன, அல்லது, அதன் சமான வேறு விஷயவாயிலாக நிக்கிரகிக்கப்பட்ட மநத்தின் ஏகாக்கிரத் தன்மை அவஸ்தைக்குப் பெயர் **சமாதாநம்** ஆம்.

6. சிரத்தை, "குரு வேதாந்த வாக்கியங்களில் விசுவாசம் சிரத்தை" என்பது. குரு வசநத்திலும், அங்ஙனமே உபநிஷத் முதலிய வேதாந்த சாஸ்திர வாக்கியங்களிலும் விசுவாசம் செய்தல் **சிரத்தை** ஆம், என உணர்க.

16. சாக்ஷுச ஞானம், 17. ராசந ஞானம், 18. கிராணஜ ஞானம், 19. மாநச ஞானம், 20. சுக, 21. துக்கம் (என்னு மிவை யாவும்) சேர்ந்து இருபத்தொரு துக்கங்களாம்.

**பிரசிநம்:—** சரீராதிகட்குத் துக்க ரூபத் தன்மை எவ்வாறாம்?

**உத்தரம்:—** துக்க சம்பந்த மிருத்தலின், கௌண ரூபத் தன்மை யாம்.

அப்பொழுது **மீமாம்சகன்,** "உனது ஈசுவரன் சுவதந்தரனா? பரதந்திரனா? என்று கேட்டனன்.

அப்பொழுது, **நையாயிகன்** "ஈசுவரன் சுவதந்திர னும். சர்வசக்தி யுடையவனு மாவன், என்று உத்தரங் கொடுத்தனன்.

பின்னர், **மீமாம்சகன்,** இவ்வாறு பொருந்துவது இல்லை என்று கூறினன்:— ஜீவன் சுவதந்தரன். ஈசுவரன் பரதந்திரன். யாது காரண மெனின், ஜீவன் தனது இச்சையினால் கர்மத்தினைச் செய்கின்றான். விரும்பின் புண்ணிய கர்மத்தினை, அல்லது, பாவ கர்மத்தினைச் செய்வன். இதனால், கர்மத்தைச் செய்வதில் ஜீவன் சுவதந்தரனா யிருக்கின்றான். ஈசுவரன் கர்மத்தின் பலனைக் கொடுப்பதில், பரதந்திரனா யிருக்கின்றான். காரணம் என்னை எனின், ஜீவன் எவ்வாறாய கர்மத்தினைச் செய்கின்றனனோ, அவ்வாறே, ஈசுவரன் சாக்ஷி ரூபத்தினால் பலனைக் கொடுக்கின்றனன். இதனால், கர்மமே முக்கிய மாம். கர்மத்தினால் ஜகத்தின் உற்பத்தி முதலியன கூறப்படுகின்றன.

**பிரசிநம்:**— உனது மதத்தில், கர்த்தவ்யத் தன்மை யாது? மோக்ஷம் யாது?

**உத்தரம்:**— எனது மதத்தில் இவ் வாறு கூறப்பட்டிருக் கின்றது:— விதி பூர்வக மாக யஞ்ஞாதி கர்மங்களைச் செய்வ தனுல் சுவர்க்காதிப் பிராப்தி உண்டாங் காலத்துத் துக்க மின்றிய சுகத்தினை அநுபவிக்கின்றுன். கர்மத்தின் பலன் உண்டான பின்னர், மனித லோகத்தில் வந்து, "கர்மத்தினுல் துக்க மின்றிய சுகத்தினை அநுபவித்தேன். இப் பொழுது எந்தக் கர்மத்தினுல் நாச மின்றிய சுகம் அநுபவிக்கக் கிடைக்குமோ, அவ் வாறுய கர்மத்தினைச் செய்ய வேண்டு" மென்று விசாரிக்கின்றனன். துக்க மின்றிய சுகத்தினை மோக்ஷம் என்கின்றனர். இதனுல், கர்மமே சார மாம்.

இதனைக் கேட்டு, **வைசேஷிக வாதி** உனது கர்மத் திற்குப் பலன் சிறிது எஞ்சியு மிருக்கின்றதா? வென்று கேட்டனன்.

**உத்தரம்:**— கர்மத்தின் பலன் அநேக பிரகார மாக அநுபவிக்க வேண்டியதாக இருக்கின்றது.

**பிரசிநம்:**— இருக்கின் ஏன் அநுபவிக்க வில்லை?

**உத்தரம்:**— சமயம் வரின் அநுபவிப்பேன்.

**வைசேஷிகன்** கர்மத்தின் பலன் எனது அதீநமே என்று கூறினன்.

**பிரசிநம்:— மீமாம்சகன்,** "உனது மதம் யாது? எவ் வாறு மோக்ஷம் உண்டாகின்றது?" என்று கேட்டனன்.

**உத்தரம்:—** நான் கால வாதி. காலத்தினை நித்திய மாக அங்கீகரிக்கின்றேன், அகண்ட மாகவும் அங்கீகரிக்கின்றேன். இதுவே எனது மதத்தில் மோக்ஷ மாம், இதுவே சார மாம்.

அப் பொழுது, **சாங்கிய வாதி** கூறுகின்றான்:— காலம் பிரகிருதியின் ஆதார மாம். பிரகிருதியில் ஸ்புரணை மாகின்றது. அநித்ய மாயும், க்ஷணிக மாயும் இருக்கின்றது. காரணம் யா தெனின், பூத பவிஷியத் வர்த்தமாந மென்னும் மூன்று பாகங்க ளாக நிற்கின்றன, பூத கால முதலியன வெவ் வேறு யிருக்கின்றன. ஆதலின், க்ஷணிக மாம். பிரகிருதி சிரேஷ்ட மாம்.

**பிரசிநம்:—** ஏ வைசேஷிகனே! உனது மதம் யாது? மோக்ஷம் யாது?

**உத்தரம்:—** எனது மதத்தில், இரு பத்து நான்கு தத்துவம் மாயையின தாம். இரு பத் தைந் தாவது தத்துவ மாகிய புருஷன் அசங்க னுவன். மாயையே ஜகத்தின் ஆகார ரூப பரிணமத்தினை யடைந்திருக்கின்றது. ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி லயத்தின் காரணம் மாயையே யாம். இது மோக்ஷம் என்று கூறப்படுகின்றது. இதுவே சார மாம்.

அப் பொழுது, **வேதாந்தி** கூறுகின்றார்:— மாயை ஜட மாம். சைதந்ய மின்றிச் சுவய மாக மாயையின் பரிணமம் பொருந்தாது. எங்ஙனம்? குலாலன் இன்றிக் குடத்தின் ஆகாரம் உண்டாகின்ற தில்லை. இதனுல், உனது மதம் பொருந்த வில்லை. நீவிர் ஐவீர் மதத்திலும் சார மில்லை.

மோக்ஷம் ஆகாச புஷ்பம் போன்று சொன் மாத்திரமே யாம். காரணம் யா தெனின், உங்கள் எல்லோரது மதத்திலும் மோக்ஷம் பஞ்ச கோசங்களி லிருக்கின்றது.

**பிரசிநம்:— சாங்கிய வாதி —** "உமது மதம் யாது? மோக்ஷம் யாது?" என்று கேட்டனன்.

**உத்தரம்: —** சிரவணஞ் செய்வா யாக. ஏக ஜீவ வாதம் எமது உடன்பா டாம். நித்யாநித்ய வஸ்து விவேகாதி நான்கு சாதநங்களை யுடைய முமுக்ஷு, சம்சார துக்க நிவிர்த்தியின் பொருட்டு * சுரோத்திரியப் † பிரஹ்ம நிஷ்ட குருவைப் பிரசிநஞ் செய்கின்றான். அப் பொழுது, சத் குரு, "சிரவண மநந, நிதித்யாசந வாயி லாக மூன்று * சரீரங்களின் விலக்ஷண மாய், பஞ்ச † கோசங்களின் வேறாய், மூன்று ‡ அவஸ்தை கட்கும் சாக்ஷியா யிருக்கும் சச்சிதாநந்த சொரூபமே நீ யாகின்றாய்" என்று உபதேசஞ் செய்கின்றனர். அப் பொழுது, சம்சார துக்கத்தின் நிவிர்த்தியும், பரமாநந்தத்தின் பிராப்தியு முண்டாகின்றது. இதற்கு மோக்ஷம் என்று கூறுகின்றனர். இதுவே சார மாம்.

---

* சுரோத்திரியர் - சாஸ்திரக் கிரம மாக வேத அத்யயநம் செய்தவர்.

† பிரஹ்ம நிஷ்டர் - நிர்க் குணப் பிரஹ்மத்தில் சர்வ காலமும் நிஷ்டை யுடையவர்.

* மூன்று - ஸ்தூல் - சூக்ஷ்ம - காரணம்.

† பஞ்ச கோசம் - அந்ந மய - பிராண மய - மநோ மய - விஞ்ஞாந மய - ஆநந்த மயம்.

‡ மூன்று அவஸ்தை - ஜாக்கிர - ஸ்வப்ந - சுழுத்தி.

**பிரசிநம்:—** இதில் பிரமாணம் யாது?

**உத்தரம்:—** வேதம் பிரமாண மாம்.

**"तत्त्वमसि"** "தத் துவ மசி" என்பது சுருதி யாம். இதன் பொருள்:— அந்தப் பிரஹ்மம் நீயா யிருக்கின்றாய் என்பது ஆம்.

**பிரசிநம்:—** இவ் வாறு, வாக்கு மாத்திரத்தினால் கூறுவ தால் பிரஹ்ம மாவ தில்லை.

**உத்தரம்:—** அடே வாதி! நீ கூறுவது சத்திய மாம். இப் பொழுது கேட்பாயாக. தத் பத தொம் பதங்களின் வாச்சியார்த்தங்களை விட்டு, லக்ஷியார்த்தத்தில் ஏகத் தன்மை யுண்டாகின்றது. இதனை 'ஜகத் அஜகத் லக்ஷணை' என்று கூறுவர்.

இந்தச் சித்தாந்தத்தினைச் சிரவணஞ் செய்து, சூநிய வாதி கூறுகின்றான்:— நன்று உண்மையே. சித்தாந்தஞ் செய்தா யாயினும், இடையில் விழுந்து விளைந்தா (மே லிருந்து கீ ழிறங்கிக் கூறினா)ய், பின்னுஞ் சிறிது கூறி இருப்பை யாயின், எனது சுகத்தினை யடைந்திருப்பாய். ஏனெனின், எல்லா வற்றினையும் அபாவஞ் செய்து, ஒரு சைதந்யத்தினை, மிச்ச மாக அங்கிகரித்தாய். இதனால், அரை நாஸ்திகன் ஆனாய். நல்லது, எல்லாவற்றின் அபாவத்தில் சேஷம் யாண் டிருக் கின்றது. இவ் வளவினதே எனது சித்தாந்தம், அங்கிகரித்துக் கொள்ளக் கடவாயாக; அபாவமே சித்தஞ் செய்யு மிடத்து மோக்ஷத்தின் அடை வுண்டாம்.

அப் பொழுது சித்தாந்தி கூறுகின்றார். அடே மூடனே! கேட்பாயாக. உனக்கு ஆதாரத்தினிடத்து திருஷ்டி போக வில்லை. சைதந்யம் சேஷ மின்றி யிருப்பின், அபாவ சித்தியை யாவர் செய்வர். இதனால், பாவாபாவங்களின் சாக்ஷி யாம்.

பிரசிநம்:— சாக்ஷி யிருந்தே அபாவம் உண்டாகுக.

**உத்தரம்:**— சாக்ஷி யின்றி அபாவம் பொருந்தாது; ஏனெனின், அபாவத்தினைச் செய்வது சைதந்ய மாம். அதுவே சேஷமா யிருப்ப தாம். இதன்கண் ஒரு யுக்தி கூறுகின்றேன். ஒரு புருஷன், வீட்டின்கண் உள்ள எல்லாச் சாமக்கிரிகளையும் எடுத்து வெளியில் போட்டுவிட்டான். வேறு புருஷன் "இவ் வீட்டில் இன்னும் யாதேனு மிருக்கின்றதா" வென்று கேட்டனன். உள் ளிருப்பவன், இவ் வீட்டில் 'ஒன்று மின் றென்று' கூறினன். வெளியி லிருப்போன், 'ஒன்று மின் றென்று ஏன் கூறுகின்றாய். இவ் வீட்டில் நீயோ யிருக் கின்றாய்' என்று கூறினன். இதனால், அபாவத்தின் சாக்ஷி சைதந்யம் சித்த மாயிற்று.

**12. சட் சாஸ்திர வாதங்களின் யுக்தி முற்றுப் பெற்றது.**

---

## 13. புத்தி கர்மங்களின் நிர்ணயத்தில் யுக்தி.

இப் பொழுது, புத்தி கர்மங்களின் நிர்ணயத்தில் பதின் மூன் றாவது யுக்தி கூறப்படுகின்றது.

**சித்தாந்தி கூறுகின்றார்:**— புத்தி எதன் ஆசிரய மாம்? எதனால் பரிணாமத்தினை அடைகின்றது?

**வாதி கூறுகின்றான்:**— புத்தி சைதந்யத்தின் ஆசிரய மாம். அல்லது, அஞ்ஞானத்தின் ஆசிரய மாம்.

ஆண்டுச், சித்தாந்தி கூறுகின்றார்:— புத்தி சைதந்யத்தின் ஆசிரய மாயின், விபரீதமாக வே யிருக்கின்றது? அஞ்ஞானத்தின் ஆசிரய மாயின், வியவகார சித்தி உண்டாக வேண்டுவ தில்லை.

**பிரசிநம்:**— ஆண்டு வாதி கூறுகின்றான் — புத்தி எதன் ஆசிரய மென்று நீயே கூறுவாயாக.

**உத்தரம்:**— சித்தாந்தி கூறுகின்றார்:— கர்மத்தின் (ஆசிரயம்) புத்தி யாம். ஏனெனின், கர்மத்தி னநுசாரம் புத்தி பிரவிர்த்திக்கின்றது. தேகத்தால் புத்தி பரிணாமத்தினை அடைகின்றது. பசு வாதிக ளிடத்தே பார்க்கப்படுகின்றது.

**பிரசிநம்:**— கர்மம் ஜடமா, சைதந்யமா?

**உத்தரம்:**— கர்மம் ஜட மாம்.

**பிரசிநம்:**— கர்மம் ஜட மாயின், ஜட மான கர்மம் புத்தியின் சேட்டையினை எவ் வாறு செய்கின்றது?

**உத்தரம்:**— ஜடத்தையும், ஜடம் சேட்டிக்கச் செய்கின்றது. மிகுந்த வேக முடைய வாயு, விருட்சத்தினை அசைப்பிக்கின்றது போ லாம்.

**பிரசிநம்:**— கர்மம் எதன் ஆசிரய மாம்?

**உத்தரம்:**— கர்மம் சைதந்யத்தின் ஆசிரய மாம்?

**பிரசிநம்:**— சைதந்யத்தின் ஆசிரயம் கர்ம மாயின், மத்தியில் கர்மத்தினை என் கொணர்தல் வேண்டும்? நான் "சைதந்யத்தின் ஆசிரயம் புத்தி" என்று கூறினேன். நீ சைதந்யமே ஆசிரய மாக அங்கிகரித்தாய். உன்னால் கூறப் பட்டது இவ் வாறு ஆயிற்று:— எங்ஙனம்? ஒரு புருஷன் மீது வைக்கப்பட்ட புற்களின் கட்டு, சிரசில் வைக்கப்பட் டிருந்தது. ஒருவன், 'புல் சிரசில் என் வைக்கப்பட்டிருக் கின்றது' என்று கேட்டனன். அதற்கு அவன், 'குதிரை கொர்ப்பமா யிருக்கின்றது. அதனால் பாரம் (மூட்டை) கொண்டு வருவ தில்லை' என்று கூறினன். (இது போல ஆகும்.)

**உத்தரம்:**— நான் கர்த்தவ்யத் தன்மையினை அங்கிகரிக்கா விடின், கர்ம உபாஸனை ஞாநங்கள் பொருந்துவ தில்லை. கர்மாதிகள் பொருந்தாவிடின், வேதத்திற்கு வியர்த்தத் தன்மை உண்டாம். இதனால், கர்மத்தினை அங்கிகரித்தல் வேண்டும்.

**பிரசிநம்:**— ஆயின், கர்மம் விபரீத மாக எனிருக் கின்றது?

**உத்தரம்:**— அஞ்ஞாந உபகித சைதந்ய மிருக்கின்றது. இதனால், விபரீதத் தன்மை யிருக்கின்றது. எங்ஙனம்? கட் குடித்த புருஷன் விபரீத மாக இருக்கின்றானே. (அது போல ஆகும்.)

**பிரசிநம்:**— இதிற் பிரமாணம் யாது?

**உத்தரம்:**— வேதம் பிரமாண மாம். இவ் வாறு வேதத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

**திருஷ்டாந்தம்:**— ஒருகலால (நாடா) ன் கள் செய்து ஸ்த்ரீயினிடத்தில் கூறினன்:— "நான் கட் குடிக்கின்றேன்

எனக்குப் புத்தியின் தடுமாற்றம் உண்டாயின், எனக்கு (இலுமிச்சம் பழ)ப் புளிப்பு கொடுப்பாயாக" என்று கூறினன். அவன் கட் குடித்து விபரீத மாகச் செய்ய ஆரம்பித்தனன். அப் பொழுது, ஸ்த்ரீ புளிப்பினைக் கொடுத்துப் புத்தியினைத் திருப்பினள்.

**தார்ஷ்டாந்தங் கூறப்படுகின்றது :—** சைதந்ய ரூப கலால (நாடா)ன் அவித்யா ரூபக் கள்ளினைச் செய்து, புத்தி ரூப ஸ்த்ரீயைப் பார்த்து, 'நான் அவித்யா ரூபக் கள்ளினைக் குடிக்கின்றேன். நான் மோக ரூப தடுமாற்ற முடையோ னயின், தத் துவ மஸ் யாதி வாக்ய விசார ரூப (இலுமிச்சம் பழப்) புளிப்பினைக் கொடு. எதனுல், ஞாந ரூப நல்ல புத்தியினை அடைவேன்' என்று கூறினன். அவன் கள் ரூப அவித்தையினை கிரஹணஞ் செய்து, இதனின் விபரீதத் தன்மை ரூப கர்த்தவ்யத்தினை அடைந்திருந்தனன். எப் பொழுது, புத்தி ரூப ஸ்த்ரீ, விசார ரூப புளிப்பினைக் கொடுத் தனளோ, அப் பொழுது, நற் புத்தி ரூப ஞாநம் (அவனுல்) அடையப்பட்டது.

**பிரசிநம்:—** உனது திருஷ்டாந்தம் பொருந்தாது. ஏ னெனின், அவித்தை அநாதி யாம், ஜந்ம மின்றிய திருப்ப தில்லை.

**உத்தரம்:—** ஆத்மா எல்லாவற்றிற்கும் காரணம். ஆதலின், அவித்தைக்குங் காரண மாம்.

**பிரசிநம்:—** இதில் பிரமாணம் யாது?

**உத்தரம்:—** சாரீரக பாஷ்யத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

"ह्यात्मा वै सर्वकारणम् ॥"

"ஹ்யாத்மா வை ஸர்வ காரணம்"

இதன் பொருள்:— நிச்சய மாக ஆத்மாவே எல்லாவற்றிற்குங் காரண மாம்.

**பிரசினம்:—** சைதந்யத்தை ஆசிரயித்த கர்மம் விபரீத மாக விருக்கு மாயின், சைதந்யத்தின் கர்மத்தினை ஆசிரயித்த புத்தியே விபரீதமா யிருக்கின்ற தென்றல் பொருந்தும். கர்மத்தினை ஹடஞ் செய்தல் என்றல் வேண்டுவ தில்லை.

**உத்தரம்:—** கர்ம மின்றிப் பிரகரணம் பொருந்துவ தில்லை; நரக சுவர்க்காதிகளுக்குச் செல்லுதல் முதலியனவும் பொருந்துவ தில்லை; பந்த மோக்ஷங்களின் வியவஸ்தையும் பொருந்தாது. இதனல், புத்தி சைதந்யத்தின் ஆசிரய மாதல் பொருந்துவ தில்லை. ஆதலின், புத்திக்குப் புருஷார்த்த ரூப கர்த்தவ்யத் தன்மையால் ஞானம் உண்டாகின்றது. அப் பொழுது, அஞ்ஞானம் நாச மாகின்றது. பின்னர், கர்ம புத்திகளின் அபாவம் உண்டாகின்றது.

**பிரசினம்:—** உன்னல் கூறப்பட்ட யாவும் வியர்த்த மாயிற்று. ஏனெனின், காரணத்தின் நாச முண்டாயின், காரிய மிருப்ப தில்லை. எங்ஙனம்? நூல் நாச மாயின், ஆடை இருப்ப தில்லை.

**உத்தரம்:—** உன்னல் கூறப்பட்டது அசத்திய மாம். காரணத்தின் நாசம் உண்டாயின், காரியமு மிருக்கின்றது.

எங்ஙனம்? ரஜ்ஜுவில் சர்ப்பத்தின் பிராந்தி நிவிர்த்தி யாய் விடினும்? பயத்தினால் உண்டான நடுக்கம் முதலியவை இருக் கின்றன; இவ் வாறு லோகத்தில் பிரசித்த மாம்.

13. புத்தி கர்மங்களின் நிர்ணயத்தில் யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 14. ஸூக்ஷ்ம விசாரத்தின் யுக்தி.

இப் பொழுது, அணு ஆத்மாவின் நிர்ணயத்தின் பதி னன் காவது யுக்தி கூறப்படுகின்றது.

**பிரசிநம்:—** உன்னால் ஆத்மா எவ் வாறு சித்தஞ் செய்யப்பட்டது?

**உத்தரம்:—** இருத்தல் மாத்திரம் சித்தஞ் செய்யப் பட்டது.

**பிரசிநம்:—** அஸ்தி (இருத்தல்) மாத்திர மாயின், ஏன் பாரு மாக வில்லை.

**உத்தரம்:—** ஆத்மா ஸூக்ஷ்ம மாம்.

**பிரசிநம்:—** இதற்குப் பிரமாணம் யாது?

**உத்தரம்:—** (கூறுகின்றார்.)

**"अणोरणीयान् ॥"**

"அணோரணீயான்" (கட வல்லி உபநிஷத் 2—20) என்னும் சுருதி யாம்.

இதன் பொருள்:— ஆத்மா அணுவினும் அணு வாம் என்பது பொரு ளாம்.

வேறு சுருதி இருக்கின்றது.

**"एषोणुरात्मा चेतसा वेदितव्यः ॥"**

"ஏஷோணுராத்மா சேதசா வேதிதவ்ய:"

இதன் பொருள்:— இந்தச் சூக்ஷும ஆத்மா, சித்தத்தினுல் அறிதற்கு யோக்ய மாம், என்பது ஆம்.

**பிரசிநம்:** — ஆயினும், ஆத்மா ஏக தேச அவச்சிந்ந மாயிற்று.

**உத்தரம்:**— உனது கூற்று பொருந்தாது; ஏனெனின், ஆத்மா வியாபக மாம்.

**பிரசிநம்:**— அணு, வியாபகம் எவ் வாறும்? "அணு ரூப மாய், ஆத்மா வியாபக மாய் இருக்கின்ற" தென்று நீர் கூறுதல் பொருந்தாது. எங்ஙனம்? ஒரு புருஷன் கங்கையில் மூழ்கினன், எல்லாச் சரீரங்களிலும் சீதளத் தன்மையினை அநுபவஞ் செய்தனன். அணு ரூப மாயின், அணுப் பிரமாண சரீரத்தில் சீதளத் தன்மையின் அநுபவஞ் செய்வன். அதனுல், அணுப் பிரமாணங் கூறுதல் பொருந்தாது. இதனுல், சரீரப் பிரமாணம் ஆத்மா வாம்.

**உத்தரம்:**— அடே வாதி! கேட்பாயாக. சரீரப் பிரமாணம் ஆத்மா வாயின், யானையின் ஆத்மா, எறும்பின் தேகத்தில் பிரவேசஞ் செய்யு மிடத்து, எறும்பு மாத்திர சைதந்ய மாம். மிச்சம் மிகுதி யாக வெளியில் இருத்தல் வேண்டும். அல்லது, எறும்பின் ஆத்மா, யானையின் சரீரத்தில் பிரவேசஞ் செய்யு மிடத்து, எறும்பின் பிரமாணம் சைதந்ய மாம். எஞ்சியன

ஜட மாம்; இவ் வாறு பார்க்கப்பட வில்லே. இதனுல், அணு மாத்திரமே யாம். இதில், திருஷ்டாந்தங் கூறப்படுகின்றது. எங்ஙனம்? தேகத்தின் ஏக தேசத்தில் சந்தநத்தின் துளி அணு மாத்திர மிருக்கின்றது. ஆனுல், அவ் வெல்லாச் சரீரத்திலும் சீதளத் தன்மையின் அநுபவஞ் செய்யப்படு கின்றது. அங்ஙனமே? அணு மாத்திரம் சித்த மாயிற்று.

பிரசிநம்:— இதற்குப் பிரமாணங் கூறுக.

உத்தரம்:— இதில்,

"अविरोधश्चंदनबिंदुवत्" (२-३-२३)

"அவிரோதச் சந்தந பிந்து வத்" (2-3-23)

என்னும் வியாச பகவான் பிரஹ்ம சூத்திரம் பிரமாண மாம்.

இதன் பொருள்:— திருஷ்டாந்தம்:- எங்ஙனம்? சரீரத்தின் ஏக தேசத்தி லிருக்கும் சந்தநத் துளி, சர்வ சரீரத்திலும் வியாபித் திருக்கும் சுகத்தினே அறிவிக்கின்றதோ, தார்ஷ்டாந்தம்:— அங்ஙனமே, ஜீவனும் தேகத்தில் வியாபித் திருக்கும் சீதளத் தன்மை முதலியவற்றினே அநுபவஞ் செய்கின்றனன். இதில் விரோத மில்லே.

பிரசிநம்:— சித்தத்தினுல் ஆத்மா அறியப்படு மாயின், சித்தம் திருஷ்டா வாம்; ஆத்மா திருசிய மாம். சித்தத்திற்கு ஆத்மத் தன்மை வந்தது. சித்தத்தினுல் ஆத்மத் தன்மை அறியப்படுகின்றது. அதனுல், யான் சித்தத்தினேயே ஆத்மா வாக அங்கிகரிக்கின்றேன். உனது ஆத்மாவால் யாது பிரயோஜநம்?

**உத்தரம்:**—'ஒன்றும் இல்லை' என்று உன்னால் கூறுதல் பொருந்தாது.

இதில், திருஷ்டாந்தம் கூறுகின்றேன். எங்ஙனம்? சூரியனது சமாந (சாமாந்ய) அம்சம் நேத்திரத்தி லிருக்கின்றது. விசேஷ அம்சம் சூரியன் தானு யிருக்கின்றான். ஆனால், நேத்திரத்தின் மலிநத் தன்மையினால், அதன் சமாந (சாமாந்ய) அம்சத்தினால், (அதன்) விசேஷ அம்சம் பார்க்கப்பட வில்லை. நேத்திரத்தின் மலிநத் தன்மை, மை போடுவதனால் நிவிர்த்தியா மிடத்து, சாமாந்ய அம்சம், தனது விசேஷ அம்சத்தினைப் பார்க்கின்றது.

**தார்ஷ்டாந்தம் கூறப்படுகின்றது:**— சூரிய ரூபப் பிரஹ்மத்தின் சாமாந்ய அம்சம், நேத்ர ரூபப் புத்தியில் ஜீவனும்; விசேஷ அம்சம் பிரஹ்ம மாம். ஆனால், நேத்ர ரூபப் புத்தியின் மலிநத்தினால், தனது விசேஷ ரூபப் பிரஹ்மத்தினைப் பார்க்க ஆற்றல் இல்லை. நேத்ர ரூபப் புத்திக்குச் சிரவணாதி விசார ரூப மையினால், மலிநத் தன்மை ரூப அவித்தை நிவிர்த்தியாகு மிடத்துச், சாமாந்ய அம்ச ரூப ஜீவந், தனது விசேஷ அம்ச ரூபப் பிரஹ்மத்தினைப் பார்க்கின்றான்.

**பிரசிநம்:**— இதில், உனது அத்வைத சித்தாந்தம் உண்டாக வில்லை. காரணம் யாது எனின், நேத்திரத்தின் சாமாந்ய அம்சத்தினால், விசேஷ அம்ச சூரியன் பார்க்கப் படுங்கால், கட படாதிகளும் பார்க்கப்பட்ட தாகின்றது.

**உத்தரம்:**— அடே வாதி! சிரவணஞ் செய்வா யாக. நேத்திரத்தின் சாமாந்ய அம்சத்தினால், விசேஷ அம்ச சூரியன் பார்க்கப்படு மிடத்து, அகண்டாகார விர்த்தி உண்டா

யிற்று. பின்னர், யாண்டுப் பார்க்கினும், ஆண்டுச் சூரியனே பார்க்கப்பட்டான். இவ் வாறே, தார்ஷ்டாந்தத்தினை உணர்க. ஆகலின், அத்வைதம் சித்தாந்த மாம்.

## 14. அணு ஆத்மாவின் நிர்ணயத்தின் யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 15. வைராக்யத்தின் யுக்தி.

இப் பொழுது, வைராக்யத்தின் நிர்ணயத்தில், பதினைந் தாவது யுக்தி கூறப்படுகின்றது.

சாதந சதுஷ்டயத்தோடு கூடிய புருஷனுக்குச் சந்நியாசத் தில் அதிகார மாம். அந்தச் சந்நியாசிக்கு, வைராக்யம் பரம அவதி யாம். அந்தச் சந்நியாசி, தார தம்மியத்தின் பேதத் தினால், "குடீசகன், பகூதகன், அம்சன், பரம ஹம்சன்" என்று நான்கு பிரகார மாக இருக்கின்றான். அவ் வைராக்யமும், பரம், அபர மென இரு வகைத் தாம். அபர வைராக்யம், 'யதமாநம், வியதிரேகம், ஏகேந்த்ரியத் தன்மை, வசீகாரம்' என நான்கு பேத மாகக் கூறப்படுகின்றது.

1. ஏகாந்தத்தி லுட்கார்ந்து கொண்டு, இந்த ஜகத்தில் 'சாரம் யாது? அசாரம் யா' தென்று சாராசார விசாரஞ் செய்தல், யதமாந மாம்.

2. ஏகாந்தத்தி லுட்கார்ந்து கொண்டு, தன் சித்தத்தில், "எனது சித்தத்தின் இவ் வளவு கஷாயம் பரிபக்குவ மாயிற்று. இவ் வளவு ஆக வில்லை" என்று விசாரஞ் செய்து,

பரிபக்குவம் ஆகாதவற்றைத் தோஷ திருஷ்டியால் நிவிர்த்தி செய்தல், **வியதிரேக** மாம்.

3. விஷயங்களின் இச்சை உண்டாயினும், மநத்தினல் இந்திரியங்களை அடக்குதல் **ஏகேந்திரியத் தன்மை** யாம்.

4. **"ऐहिकामुष्मिक विषय जिहासा"**

"ஐஹிகாமுஷ்மிக விஷய ஜிஹாசா"

இதன் பொருள்:— இந்த லோக, பரலோகங்களின் விஷயங்களின் தியாகம், **வசீகார** மாம்.

அந்த வசிகாரம், "மந்தம், தீவிரம், தீவிர தரம்" என்று மூன்று வகைத் தாம்.

1. ஸ்த்ரீ புத்ராதிகளின் வியோகத்தினல், சம்சாரத்தின் துச்ச புத்தியினல், விஷயங்களைத் தியாகஞ் செய்தல், **மந்த வைராக்ய** மாம்.

2. "இந்த ஜந்மத்தில் புத்திராதிகள் வேண்டாம்" என்னும் ஸ்திர புத்தியினல், விஷயங்களை விடுதல், **தீவிர வைராக்ய** மாம்.

3. பின்னர், "தன்னேடு கூட பிரஹ்ம லோகாதி பரியந்தம் வேண்டாம்" என்னும் ஸ்திர புத்தியினல், விஷயங்களை விடுதல், **தீவிர தர வைராக்ய** மாம்.

மந்த வைராக்யத்தில், சந்நியாசத்திற் கதிகார மில்லை. தீவிர வைராக்யம் உண்டானல், எங்கும் சஞ்சரித்தற்குச் சக்தி யின்றாயின், குடீசக சந்நியாசத்திற் கதிகார மாம்.

எங்கும் சஞ்சரித்தற்குச் சக்தி உண்டாயின், பகூதக * சந்நியாசத்திற் கதிகார மாம். தீவிர தர வைராக்யம் உண்டாயின், ஹம்ச சந்நியாசத்திற் கதிகார மாம். இன்னும் சிறிது கூறுகின்றனர். தீவிர தர வைராக்யம் உண்டாயின், முமுக்ஷுவிற்குப் பரம ஹம்ச சந்நியாசத்திற் கதிகார மாம். அப் பரம ஹம்ச சந்நியாசம், 'விவிதிஷா சந்நியாசம், வித்வத் சந்நியாசம்' என இரு வகைத் தாம்.

1. சாதந முடையவ னாயின், தத்துவ ஞானத்தின் இச்சையினால், செய்தற்கு யோக்ய மான சந்நியாசம், **விவிதிஷா** சந்நியாச மாம்.

2. கிரஹஸ்தாசிரம முதலியவற்றில், சிரவணாதிகளினால் உண்டான பிரஹ்ம சாக்ஷாத்காரம், சந்நியாசம் முதலிய வற்றினால், சித்தத்தின் விசிராந்தி, ஜீவந் முக்தியின் உபதேசம் என்பவற்றால் செய்தற்கு யோக்ய மான சந்நியாசம், **வித்வத் சந்நியாச** மாம். இதனையே 'பர வைராக்ய' மென்று (யோகிகள்) கூறுகின்றனர்.

15. வைராக்யத்தின் நிர்ணயத்தின்
யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 16. நிஷேத வாயி லாக ஞாந முண்டாவதன் யுக்தி.

இப் பொழுது, நிஷேத வாயி லாக ஞாநம் உண்டாவதற்குப் பதி னாறுவது யுக்தி கூறப்படுகின்றது.

---

* பகு — உதகம், பகு — அநேகம், உதகம் — ஜலம்.

**திருஷ்டாந்தம்:—** ஒரு புருஷன், வேறு ஒரு புருஷனை நமஸ்கரித்து, "மகா ராஜாவே! எதனால் எனக்குக் கல்யாணம் உண்டாம், அவ் வாறுய ஓர் உபாயத்தினைக் கூறுவீராக" என்றனன். அப் பொழுது, அவன், "நீ பூமியினைப் பூசிப்பாயாக. 'எது பல முடைய தாகின்றதோ, அதுவே கல்யாணத்தினைக் கொடுப்ப தாம்.' என்று இவ் வளவு விசாரமும் செய்து கொள்க" என்றனன். இவ் வாறு, சிரவணஞ் செய்து, அப் புருஷன், பூமியினை உபாஸனை செய்தனன். பதார்த்தம் போஜநம் முதலியவற்றை அர்ப்பணஞ் செய்து வந்தனன். ஒரு நாள் அந்தப் போஜநங்களை எலி கொண்டு போவதனைப் பார்த்தனன். அப் பொழுது, அப் புருஷன், "பூமியினும் எலி பல முடையது" என்று உணர்ந்தனன். காரணம் என்னை எனின், பூமியின் போஜநத்தை எலி கவர்ந்தது. பூமி ஒன்றுங் கூற முடிய வில்லை. அப் பொழுது, அப் புருஷன், எலியினை உபாஸனை செய்தனன். காரணம் யாது எனின், எலி பல முடைய தென்று உணர்ந்தமையின். ஒரு திநம் பூனை எலியினைத் தின்று விட்டதனைப் பார்த்தனன். அப் பொழுது, அவன், "எலியினும் பூனை பல முடைய" தென்று விசாரித்து நிச்சயித்தனன். இதனால், பூனையினை உபாஸனை செய்து வந்தனன். பின்னர், ஒரு திநம், நாய் பூனையினைத் தூக்கிக் கொண்டு போவதனைக் கண்டனன். அப் பொழுது, அப் புருஷன், "நாயினைப் பல முடைய" தென்று உணர்ந்து, அதனை உபாஸனை செய்ய ஆரம்பித்தனன். பின்னர், ஒரு திநம் அப் புருஷனது ஸ்த்ரீ, நாய் ரொட்டியினைத் தின்பதனைப் பார்த்து, அதனை அடித்தனள். அப் பொழுது, அப் புருஷன், ஸ்த்ரீயினை உபாஸனை செய்ய

ஆரம்பித்தனன். ஒரு தினம் ஸ்த்ரீயின் வியவகாரம் மலினமா யிருப்பதனை உணர்ந்து, அப் புருஷன் ஸ்த்ரீயினை அடித்தான். அப் பொழுது, "எல்லாவற்றினும் பல முடையவன் நானே" என்று விசாரஞ் செய்தனன். இவ் விசாரத்தினால், தானே கல்யாணத்தினை அடைந்தான்.

**தார்ஷ்டாந்தம்:**— ஒரு முமுக்ஷு, ஒரு விவேகி புருஷனைப் பார்த்து, விஞ் ஞாபகஞ் செய்து, "பகவானே! எதனால் யான் கல்யாண ரூப சுகத்தினை அடைவேன்? இவ் வாரூப ஒரு உபாய ரூப சாதநத்தைக் கூறுவீராக" என்று கேட்டனன். அப் பொழுது, அந்த விவேகி புருஷன், "நீ பூமி ரூப உபாசிய தேவதையைப் பூசிப்பாயாக. 'பல முடையது எதுவோ, அது கல்யாணத்தினைச் செய்வ தாம்.' என இவ் வளவு விசாரமும் செய்க" என்று, கூறுதல் ரூப உபதேசத்தினைச் செய்தனன். இதனால், உபாசிய தேவதை யைப் பல முடைய தேவதை யாக அறிந்து, உபாஸனை செய்ய ஆரம்பித்தனன். போஜந முதலியவற்றை முன்னர் வைத்தனன். ஒரு நாள் விசாரஞ் செய்து பார்க்குமிடத்துப், போஜநத்தினைத் தேக ரூப எலி தின்றுவிட்டது. பூமி ஸ்தாந ரூப உபாசிய தேவதை யொன்றுஞ் செய்ய முடிய வில்லை. அப் பொழுது, தேக ரூப எலியினை உபாஸனை செய்ய வாரம் பித்தனன். தேகமே பல முடைய ரூப மகத் தாம். பின்னர், ஒரு தினம் விசாரஞ் செய்து பார்க்குமிடத்துத், தேக ரூப எலியினைப், பூனை ரூப இந்திரியங்கள் பிடித்துக் கொண்டன. அப் பொழுது, அப் புருஷன், இந்திரிய ரூபப் பூனையினைப் பல முடைய தாக அறிந்து, இந்திரிய ரூபப் பூனையினை உபாஸனை செய்தனன். பின்னர், விசாரஞ் செய்து பார்க்கு

மிடத்துப், பிராண ரூப நாயால், இந்திரிய ரூபப் பூனை தூக்கிக் கொண்டு செல்லப்பட்டது. இதனால், அப் புருஷன் நாய் ரூபப் பிராணனை உபாஸனை செய்ய ஆரம்பித்தனன். பிராணனே பல முடையது எனவும் உணர்ந்தனன். அப் பொழுது, பின்னர், விசாரஞ் செய்து பார்க்கு மிடத்துப், புத்தி ரூப ஸ்த்ரீ, பிராண ரூப நாய், அந்ந பாநாதி ஆகாரஞ் செய் வதனைப் பார்த்துத், திரஸ்கார ரூப அடித்தலைச் செய்தனள். அப் பொழுது, அப் புருஷன், புத்தி ரூப ஸ்த்ரீயினைப் பல முடைய தாக அறிந்து, "புத்தி ரூப ஸ்த்ரீயே சிரேஷ்ட மாம்" என்று நிச்சயித்தனன். பின்னர், அப் புருஷன் விசாரஞ் செய்து பார்க்கு மிடத்து, புத்தி ரூப ஸ்த்ரீ, பிரபஞ்சத்தினையும், நிச்சயஞ் செய்திருக்கின்றனள்; இதுவே இதனது வியவகார மலிந மாம். ஆதலால், அப் புருஷன், புத்தி ரூப ஸ்த்ரீயினை அடித்தல் ரூப திரஸ்காரஞ் செய்தனன். பின்னர், விசாரஞ் செய்து, "நானே பல முடைமை ரூப மகத் தாவன்" என்று உணர்ந்தனன்.

**பிரசிநம்:—** புத்தியோ எல்லாவற்றையும் அநுபவிக் கின்றது. புத்தியினும், ஆத்மா பெரி தென எங்ஙனங் கூறப் படுகின்றது? இதில் பிரமாணம் யா தேனு மிருக்கின்றதா?

**உத்தரம்:—** தம்பி கேட்பாயாக. புத்தி சைதந்யத்தின் பிரகாசத்தினை அடைந்து, கட படாதிகளை என் நிச்சயஞ் செய் கின்றது? இதனால், ஆத்மாவே மகத் தாம்.

இதிற் பிரமாணம், ஸ்ரீ பகவான் கீதையில்,

**इंद्रियाणि पराण्याहुरिंद्रियेभ्यः परं मनः।**
**मनसस्तु परा बुद्धिर्योबुद्धेः परतस्तु सः॥ ३—४२**
**(भगवत्गीता)**

" இந்திரியாணி பராண்யாகுரிந்திரியேப்ய : பரம் மந :,
மநசஸ்து பரா புத்திர் யோ புத்தே : பரதஸ்து ச :"
(3—42) கூறியிருக்கின்றார்.

இதன் பொருள்:— விஷயங்களிலும், இந்திரியம் சிரேஷ்ட மாம் என்று கூறுகின்றனர். இந்திரியத்தினும், மநம் சிரேஷ்ட மாம். மநத்தினும், புத்தி சிரேஷ்ட மாம். புத்தியினும், சிரேஷ்டமா யிருப்பது பரமாத்மா வாம்.

**16. நிஷேத வாயி லாக ஞாந முண்டாவதன் யுக்தி முற்றுப் பெற்றது.**

---

**17. சச்சிதாநந்த ஆத்மாவின் நிர்ணயத்தின் யுக்தி.**

இப் பொழுது, சச்சிதாநந்த ஆத்மாவின் நிர்ணயத்தில் பதி னேழாவது யுக்தி கூறப்படுகின்றது.

**சித்தாந்தி கூறுகின்றார்:—** ஆத்மா ஆநந்த ரூப மாம். காரணம் யா தெனின்? யாண்டும், ஆநந்தமே ஆநந்தம் இருக் கின்றது. ஆநந்த மின்றி, ஒரு வியவகாரமுஞ் சித்திப்ப தில்லை.

**பிரசிநம்:—** எல்லா வியவகாரமும் கர்த்தவ்யத் தன்மை யினுற் சித்திக்கின்றன. "எங்ஙனங் கர்மம் செய்யப்படுகின்ற தோ, அங்ஙனமே, வியவகாரஞ் சித்திக்கிற" தென்று கர்ம

காண்டத்தில் எழுதப்பட்டிருக்கின்றது. "ஆநந்தத்தானே எல்லா வியவகாரமுஞ் சித்திக்கின்ற" தென்று எவ் விடத் தெழுதப்பட்டிருக்கின்றது ?

உத்தரம்:— அடே! தம்பி கேட்பாயாக. இதில், சுருதி பிரமாண மாம்.

**आनंदाद्धयेवखल्विमानि भूतानि जायंते ।**
**आनंदेन जातानि जीवन्ति । आनन्दं प्रयन्त्यभिसंविशन्ति ॥**
**(तैत्रीयोपनिषत् ३—६).**

"ஆநந்தாத்யேவ கல்விமாநி பூதாநி ஜாயந்தே, ஆநந்தேந ஜாதாநி ஜீவந்தி, ஆநந்தம் பிரயந்த்யபிசம்விசந்தி" (தைத்ரீயோநிஷத் 3—6.)

இதன் பொருள்:— ஆநந்தத்தானே நிச்சய மாக இந்தப் பிராணிக ளுண்டாகின்றன. உற்பத்தியான பிராணிகள் ஆநந்தத்தானே ஜீவிக்கின்றன. ஆநந்தத்தையே அடைகின்றன. ஆநந்தத்தின்கண்ணே பிரவேசஞ் செய்கின்றன.

பிரசிநம்:— உண்மையே; ஆநந்த மாத்திரமே எல்லா வியவகாரத்தினையுஞ் சித்தஞ் செய்யு மாயின், துக்கத்தினடைவு ஏன் உண்டாகின்றது ?

உத்தரம்:— பூர்ண ஆநந்த ரூபமே இருக்கின்றது. ஆனல், சம்சாரத்தில் ஒருவிஷயத்தின் மேல் வைத்து ஆநந்தத்தினைக் கொள்ளுகின்றனர். ஆநந்தமோ தன்னது ஆம். ஆயினும், நாச முடைய வஸ்துவின் மீது வைப்பதனல், ஆநந்தமும் கீழே விழுவ (நாச முடைய) தாகின்றது. எந்த வஸ்து

வின் மீது ஆநந்தத்தினை வைத்து, ஆநந்தங் கொள்ளப்படு கின்றதோ, அந்த வஸ்துவின் அபாவத்தில், ஆநந்தத்திற்கும் அபாவம் உண்டாகின்றது. ஆநந்தத்தின் அபாவ முண்டா மிடத்து, ஆநந்தத்தின் விரோதி யாய துக்கம் உண்டாக வேண்டுவதே யாம்.

பிரசிநம்:— ஆநந்தத்தின் அபாவ முண்டாயின், ஆநந்த சொரூபமாகவே இருக்கின்றது?

**உத்தரம்:—** அத்யஸ்தாநந்தத்தின் அபாவம் உண்டா கின்றது. ஏனெனின், அத்யஸ்தம் கற்பிதத்திற்குக் கூறுவ தாம். சொரூப ஆநந்தமோ சதா ஏக ரச மாம். அஞ்ஞாந காலத்திலும் ஆநந்தமே விரும்பப்படுகின்றது. பின்னும், சிரவணஞ் செய்க. எந்த ஆநந்தத்தினை விஷயத்தின் மீது வைத்துக் கொள்ளப்படுகின்றது? எங்ஙனம்? புத்திரன் மீது வைத்து ஆநந்தங் கொள்ளப்படுகின்றது. உனக்குக் கண் இருக்கின் பார்த்துக்கொள்வாயாக. ஆநந்தம் ஏக ரச மாம். எங்ஙனம்? உன்னால் புத்திரன் மீது தனது ஆநந்தத் தினை வைக்கப்பட்டதோ, அந்த ஆநந்தமும், உனது ஆநந்த மும் ஏக ரச மா யிருக்கின்றன.

பிரசிநம்:— "ஸ்த்ரீ புத்திராதிகளில், தனது ஆநந்தத் தினை வைத்துக் கொள்கின்றனர்" என்று எவ்வாறு நான் உணர்வேன்? இவர்கள் ஆநந்த ரூப மாகவே இருக்கின்றனர். இவர்க ளிடத்து ஆநந்த மின்றாயின், ஒருவரும், ஸ்த்ரீ புத்திரர் முதலியோரை அங்கீகரியார்.

**உத்தரம்:—** அடே வாதி! கேட்பாயாக. இப் புருஷன், துக்கியாங் காலத்து, ஸ்த்ரீ புத்திரர்கள் வந்து, "மஹாராஜாவே! எங்களைப் பார். நாங்கள் உனக்கு மிக விருப்பமுடையவர்கள்" என்று உரத்துக் கூறுகின்றனர். அப்பொழுது, இப் புருஷனுக்கு ஒருவரது வார்த்தையும் சுகம் கொடுப்ப தில்லை. அடே! வாதி இப் பொழுது, பார்ப்பாயாக; தனது ஆநந்தத்தின்கண்ணே இருக்கின்றனன். ஸ்த்ரீ புத்திராதிகள் ஆநந்த மாயின், ஆநந்த மேன் கொடுக்க வில்லை.

**பிரசிநம்:—** நன்று கூறினீர். ஆயின், தனது ஆநந்தம் எவ் வாறும்? அவனே துக்கி யாயினன்.

**உத்தரம்:—** இதற்கு உத்தரம் முன்னரே நான் கொடுத்திருக்கின்றேன். நாச முடைய வஸ்துவின் மீது வைத்துக் கொள்ளப்படும் ஆநந்தம் நாச முடைய தாகின்றது. அந்த ஆநந்தத்தினை அநுபவித்தலினால் துக்கத்தினை அடைகின்றனன். ஈண்டும், நாச முடைய சரீரத்தின் மீது ஆநந்தத்தினை வைத்துக் கொள்ளப்படுகின்றது. அதன் அபாவத்தின் துக்கத்தில், ஆநந்தமும் நாச மாய்விட்டது. இதனால், ஞாநி புருஷன் நாம ரூபத்தினைப் பாதஞ் செய்து, பரமாநந்த ரூபமாகவே இருக்கின்றனன். வேறு வஸ்துவின் மீது வைத்து ஆநந்தத்தினைக் கொள்வது, உபாசகர்களின் * தர்ம மாம். காரணம் என்னை எனின், ஒரு மூர்த்தியின் மீது ஆநந்தத்தினை வைத்துக் கொள்ளப்படுகின்றது. அந்த மூர்த்தியின் வியோகத்தினால் துக்க முண்டாகின்றது. உபாசகன் சர்வ வியாபியாக ஈசுவரனை அங்கீகரிக்கின்றனன் என்று வேறு சிலர் கூறு

---

* உபாசகர் — பூஜை முதலியன செய்பவர்.

கின்றனர். ஆயினும், தன்னைச் ஜீவ னாகவே அங்கிகரிக் கின்றனன். இதனா லகண்ட மாக வில்லை.

**பிரசிநம்:—** சர்வ வியாபி யாக அங்கிகரிப்பவனது திருஷ்டியில், சர்வ வியாபியாகவே இருக்கின்றது.

**உத்தரம்:—** உபாசகர்களது மதத்திலும், சர்வ வியாபகத் தன்மை எவ் வாறும்? சித்திப்ப தில்லை. இதன்கண் ஒரு யுக்தி கூறப்படுகின்றது. சில நூறு பக்தர் களாகிய உபாசகர், ஒரு ஸ்தானத்தில் கூடி யிருந்தனர். ஒரு புருஷன் வந்து, "பரமேசு வரனை எங்ஙனம் அங்கிகரிக்கின்றீர்" என்று கேட்டனன். அவர்கள் எல்லோரும், "நாங்கள் பரமேசுவரனைச் சர்வ வியாபி யாக அங்கிகரிக்கின்றோம், நாங்கள் அவருக்குத் தாசர்கள்" என்று கூறினர். அப் பொழுது, அப் புருஷன், ஒரு புருஷனை, "நீ யார்?" என்று கேட்டனன். அவன், "நான் தாசன்" என்று கூறினன். இரண்டா மவன், மூன்றா மவன், இவ் வாறு, எல்லோரையுங் கேட்டனன். எல்லோரும் "நாங்கள் தாசரே" என்று கூறினர். நூறு மனிதர்களுள் யாண்டும் பரமேசுவரன் கிடைக்க வில்லை. நூற்றுவரும், வெவ் வேறாகத் தம்மை ஜீவ ராகவே அறிவித்தனர். இதனால், சகுணம் சர்வ வியாபி யாவ தில்லை. நிர்க்குணமே சர்வ வியாபி யாம்.

**பிரசிநம்:—** ஆயின், ஆத்மா ஆநந்த மாத்திரமாக இருக் கின்றது. இவ் வாறாய ஆநந்தமோ, ஜட வஸ்துவிலு மிருக் கின்றது. சிவப்புக் கல்லி னிடத்துப் பாலகனுக்கும் பார்க்கு மிடத்துப் பிரசுந்ந முண்டாவது போ லாம்.

**உத்தரம்:—** அடே! தம்பி கேட்பாயாக. சிவப்புக் கல்லி னிடத்து உண்டா மாநந்தம், வேற்ரோரா லடையப்படு கின்றது. சிவப்புக் கல் தன்னை ஆநந்த ரூப மாக அறிவ தில்லை. ஈண்டு, ஆத்மா, சைதந்ய ஆநந்த ரூப மாம். சைதந்ய மாத்திரம் சர்வ வியாபி யாம். ஞாந மாத்திரத்தினைச் சைதந்ய மென்கின்றனர்.

**பிரசிநம்:—** ஆயின், இவ் வாறு சிதாநந்தம் எக் காலத் திலும் இரா தாம். காரணம் என்னை எனின், மநத்தினு லறியப்படுதலின்.

**உத்தரம்: —** அடே வாதி! கேட்பாயாக. மநத்தின் பாவ அபாவத்தின் சாக்ஷி மூன்று காலத்திலு மிருக்கும், நீ உன்னையே பார்ப்பாயாக. நீ தேகாதிகளின் முன்னு மிருந் தனை, இப் பொழுதும், இந்தத் தேகாதிகளின் அபாவத்திலு மிருப்பாய். இதனுல், ஆத்மா அஸ்தி மாத்திர மாம். அஃதாவது, இருத்தல் மாத்திரம் என்று சித்த மாயிற்று. அந்தச் சச்சிதாநந்த சொரூப சுயம்பிரகாசம், சுயமாகவே சித்தித்திருக்கின்றது. இதனுல், விவேகி புருஷன் தேகாதி களைப் பாதஞ் செய்து, பூரணாநந்த மாக நிலைத்திருக்கின்ருன். எவன், வஸ்துவின் மீது வைத்து ஆநந்தத்தினைக் கொள்ளு கின்ருனனோ, அவன் துக்கத்தினை அடைகின்ருன். அவனது அஞ்ஞாநம் நஷ்ட மாக வில்லை. அடே வாதி! இதில், வைராக்கியமே காரண மாம்.

**பிரசிநம்:—** இதில், பிரமாணம் யாது?

**உத்தரம்:—** இதில், ஸ்மிருதி பிரமாண மாம்.

निषिध्य निखिलोपाधीन्नेति नेतीति वाक्यतः ।
विद्यादैक्यं महावाक्यैर्जीवात्मपरमात्मनोः ॥

(आत्मबोधः ३०)

"நிஷித்ய நிகிலோபாதீந் நேதி நேதீதி வாக்யத:,
வித்யாதைக்யம் மஹா வாக்யைர் ஜீவாத்ம பாமாத்ம
நோ:" (ஆத்ம போதம் 30.)

இதன் பொருள்:— "ஈ தன்று ஈ தன்று" என்னும் வாக்கியத்தினால், எல்லா உபாதிகளையும் நிஷேதஞ் செய்து, மஹா வாக்கியத்தினால், ஜீவாத்மா பரமாத்மாக்களின் ஏகத்வத்தினை உணர்தற்கு யோக்கிய மாம்.

**பிரசிநம்:—** சச்சிதாநந்த மாத்திரமே ஆத்மா வாயின், ஸ்த்ரீ புத்திராதிகளினால் பாதகம் யாது உளது?

**உத்தரம்:—** அடே தம்பி! ஸ்த்ரீ புத்திராதிகள், பந்தத்திற்குக் காரண மாம். ஆதலால், பந்த ரூபமே யாம்.

**பிரசிநம்:—** ஸ்த்ரீ புத்திராதிகளோ, வேறாகவே பார்க்கப் படுகின்றனர். பின்னர், எங்ஙனம் பந்த மாம். இதில், பிரமாணம் உள தாயின் கூறுவீராக.

**உத்தரம்:—** இதில், ஸ்மிருதி பிரமாண மாம்.

लोहदारुमयैः पाशैः पुमान् बद्धो विमुच्यते ।
पुत्रदारमयैः पाशैः मुच्यतोपि न मुच्यते ॥

"லோஹ தாரு மயை: பாசை: புமாந் பத்தோ விமுச்யதே, புத்ர தார மயை: பாசை: முச்யதோபி ந முச்யதே"

இதன் பொருள்:—இரும்பு மர ரூபங்களாகிய கயிறுகளினுல் கட்டப்பட்ட புருஷன் விடுபடுகின்ருன். ஸ்த்ரீ புத்திராதி ரூப கயிறுகளினுல் (கட்டப்பட்ட புருஷன்) விடுவிப்பினும், விடுபடுவ தில்லை. ஆதலின், ஞாநமோ, எல்லாவற்றினையும் பாதஞ் செய்து உண்டாகின்றது. ஒரு வஸ்துவிலாவது ஆசை இருப்பினும், ஞாந முண்டாதல் துர்லப மாம். ஆதலின், ஆசையினையே விடுதல் வேண்டும்.

பிரசிநம்:— உண்மையே; எல்லாவற்றின் பாதத்தில், ஒரு கால், ஆத்மாவிற்கும் பாத முண்டாய்விடும், பாத முண்டாவ தில்லை என்பதில், பிரமாணங் கூறுவீராக.

உத்தரம்:— ஸ்மிருதி பிரமாண மாம்.

**सर्वद्वैतबाधेप्यबाधरूपः ॥**

" சர்வதுவைதபாதேப்யபாதரூப:"

இதன் பொருள்:—எல்லாத் துவைதங்களும் பாத மாயினும், ஆத்மா பாத மின்றிய ரூப மாம். எல்லாத் துவைதங்களின் பாதத்தினுல், அகண்ட ஆநந்த ரூபமே எஞ்சியிருக்கின்றது.

வேறு பிரமாணமும், பஞ்ச தசியின் பஞ்ச கோச விவேகப் பிரகரணத்தில் கூறப்பட்டிருப்பதனையுங் கேட்பாயாக.

**सत्यत्वं बाधराहित्यं जगद्बाधैक साक्षिणः ।**
**बाधः किं साक्षिको ब्रूहि तत्त्वसाक्षिक इष्यते ॥ (३—२९)**

" சத்யத்வம் பாதராஹித்யம் ஜகத் பாதைக சாக்ஷிண:, பாத: கிம் சாக்ஷிகோ ப்ரூஹி தத்வ சாக்ஷிக இஷ்யதே:" (3—29)

இதன் பொருள்:— பாத மின்றியது சத்திய மாம். (ஜகத் பாதத்திற்குச் சாக்ஷி யாம். எதனை சாக்ஷி யாகக் கொண்டு பாத முண்டாகின்றது? கூறுக. தத்துவத்தினைச் சாக்ஷி யாக வுடைய தென்று கூறப்படுகின்றது.)

பிரசிநம்:— இந்தப் பிரசங்கத்தில், யாது வந்தது?

உத்தரம்:— ஜகத்தின் பாதத்தில், ஒரு சாக்ஷி யிருக்கின்றது. ஜகத்தின் பாத மென்பது, சுழுத்தி மூர்ச்சை சமாதிகளி லில்லாத் தன்மை யாம்.

பிரசிநம்:— ஜகத்தின் பாதத்தில், சாக்ஷிக்கும் பாத முண்டாம்?

உத்தரம்:— ஜகத்தின் பாதத்தில் சாக்ஷியின் பாத முண்டா மாயின், நீயே கூறுவாயாக, பாதத்தின் சாக்ஷி யாவர்? ஒருவரு மில்லை.

பிரசிநம்:— சாக்ஷி யின்றியும், ஆத்மாவின் பாத மேன் உண்டாகாது?

உத்தரம்:— சாக்ஷி யின்றிப் பாத முண்டாவ தில்லை; வேறு வகைத் தாக அதிப் பிரசங்க மாம். இதனால், எப்பொழுதும் சச்சிதாநந்தமே சுத சித்த மாம்.

17. சச்சிதாநந்த ஆத்மாவின் நிர்ணயத்தின் யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 18. தலைப் பாகையின் திருஷ்டாந்தத்தினால் ஞாந நிர்ணயத்தின் யுக்தி.

இப் பொழுது, தலைப் பாகையின் திருஷ்டாந்தத் தினால், ஞாந நிர்ணயத்தில் பதி னெட்டாவது யுக்தி கூறப்படுகின்றது.

திருஷ்டாந்தம்:— ஒரு ராஜா, ஒரு புருஷனைக் கூப்பிடு தற்குத் தூதனை யனுப்பினான். அப் புருஷன், "எனக்கு ஒரு மந்திரியு மில்லை", ஆயின், "நான் ராஜாவின் சமீபத் திற் செல்லல் உசிதமா? அன்று? வென்று யாரோடு நான் சம்மதஞ் செய்வேன்" என்று கூறினன். பின்னர், அப் புருஷன், இவனே வேலைக்காரன். இதனால், 'இச் சேவக னோடு எவ் விதச் சம்மதியினைச் செய்வ' தென்று விசாரஞ் செய்தனன். இவனுக்கு ஒரு மந்திரியு மில்லாவிடத்து, 'தனது தலைப் பாகையோடு சம்மதஞ் செய்க' வென்று ஒருவன் கூறிய யுக்தி ஞாபகத்திற்கு வந்தது. அப் பொழுது, இப் புருஷன் தனது தலைப் பாகையை நேரே வைத்துச் சம்மதஞ் செய்ய வாரம்பித்தனன். இவ் வளவில் இவனுக்கு, "எந்த வார்த்தையில் குணம் மேலிட்டுக் குற்றங் குறைந்திருக்கின்றதோ, அது செய்யத் தக்கது" என்று சித்தத்தில், ஸ்புரண மாயிற்று. அப் பொழுது, இவன் சித்தத்தில், "ராஜாவின் சமீபத்தில் போகாதிருக்கு மிவ்வளவே குண" மென்று ஸ்புரண மாயிற்று. சுகமா யிருக்கின்றது. சிரம முண்டாவ தில்லை: குற்றம் அப மாநம் மிகுதியா யிருக்கின்றது. முன்னர் அவஞ்ஞையோ, அபமாநமோ செய்யப்பட்டிருக்கின்றது, போகாதிருக்கின்,

புது அபமாநம் செய்யப்படும். அவர் ராஜாவா யிருக்கின்றார். போகாதிருக்கின் எவ் வாறு காடநஞ் செய்வர்? செல்லின், செல்கிற சிரமமோ வுண்டாம். ஆனால், ராஜா அபராதத்தினை க்ஷமிப்பார். இதில், சுகம் அதிக மாம். இதனால், செல்லுதலே உசித மாம். (என நிச்சயித்தனன்.) அப்பொழுது, இப் புருஷன், ராஜ சமூகத்திற் சென்றனன். அப் பொழுது, ராஜா சில காகிதங்களைச் செய்யு மாறு ஆஞ்ஞை செய்தனன். அப் புருஷன், ஆறு பிரஹர (நாளிகைப்) பொழுது போகும் வரை அந்தக் காகிதங்களை நன்கு செய்து ராஜாவிற்குக் காண்பித்தனன். ராஜா காகிதங்களைப் பார்த்து மிக்க சந்தோஷ மடைந்தனன். அந்தப் புருஷனுக்குப் பிரசாதங் கொடுத்தனன். அப் பொழுது, அப் புருஷன், பய மின்றியவனாய் ஆநந்தத்தினை அடைந்தான்.

தார்ஷ்டாந்தம்:— ஜீவ ரூப புருஷனை, ஈசுவர ரூப ராஜா, சாஸ்திர ரூப தூதனை அநுப்பி, கூப்பிடுதல் ரூப எதிர்ப்படுதற்கு ஆஞ்ஞை செய்தனர். அப் பொழுது, அந்த ஜீவ ரூப புருஷன், "நான் ஈசுவர ரூப ராஜ சமூகத்திற்குச் செல்லல் உசிதமா? அன்றா? என்று, நான் யாரோடு விசார ரூப சம்மதத்தினைச் செய்வேன். இந்திரிய ரூப சேவகனோடு எந்தச் சம்மதஞ் செய்வேன்" என்று கூறினன். அப் பொழுது, புத்தி ரூப தலைப் பாகையினை நேரே வைத்து, விசார ரூப சம்மதியினைச் செய்ய வாரம்பித்தனன். அப் பொழுது, இவன் சித்தத்தில், இவ் வாறு ஸ்புரண மாயிற்று:— ஈசுவர ரூப ராஜாவின் சமீபத்தில் செல்லாதிருக்கின், இவ் வளவே குண மாம்; விஷயாநந்த

ரூப சுக மிருக்கின்றது. சமீபத்திற் செல்லின், இவ் விஷயா நந்த மிருப்ப தில்லை. அவகுணம் (குற்றம்) அநேகம் இருக்கின்றது. முன்னரே எதிர்ப்படல் ரூப அவஞ்ஞை யினைச் செய்து, வருதல் போதல் ரூப துக்கத்தினை அநுப வித்தேன். இப் பொழுது, புது அவமானஞ் செய்யின், ஈசுவர ரூப ராஜா எவ்வித தாடந ரூப ஜநந மரணத்தின் விசேஷ துக்கத்தினை யறிவிப்பன். நான் ஈசுவர ரூப ராஜாவின் எதிரிற் செல்லினே, சாதந ரூப சிரமமோ வுண்டாம். ஆனல், ஈசுவர ரூப ராஜா அபராதத்தினை க்ஷமிப்பார். இதனிடத்தே எனக்குக் கல்யாண முண்டாம். ஆதலின், ஈசுவர ரூப ராஜாவின் சமீபத்திற் செல்லலே உசித மாம். (என நிச்சயித்தனன்.) அப் பொழுது, இந்த ஜீவ ரூப புருஷன், ஈசுவர ரூப ராஜாவின் சமீபத்தில் செல்லல் ரூப எதிர்ப்படலைச் செய்தனன். ஈசுவர ரூப ராஜா, காகிதஞ் செய்தல் ஸ்தாந மாய, சில சாதநத்தினை ஆஞ்ஞை செய்தனன். அப் பொழுது, ஜீவ ரூப புருஷன் ஆறு பிரஹர (நாழிகை) நாளைப் போக்குதல் ரூப, சடூர்மி களின் அபாவ பரியந்தம், சாதந ரூப காகிதங்களைச் செய் தற்குப் பிரார்த்தனை செய்தனன். அப் பொழுது, ஈசுவர ரூப ராஜா, சச்சிதாநந்த ரூப பிரசாதத்தினைக் கொடுத் தனன். அப் பொழுது, ஜீவ ரூப புருஷன், ஆநந்தத்தினை அடைந்தான்.

பிரசிநம்:— இதில் பிரமாணம் யாது? ஒன்று சடூர்மி கட்கே அபாவம் யாது? ஒரு விசேஷமும் பார்க்கப்பட வில்லை.

உத்தரம்:— இதில், சுருதி பிரமாண மாம்.

षडूर्मि रहितः शिवः ॥

"சடூர்மி ரகித: சிவ:"

இதன் பொருள்:— ஆறு ஊர்மிக ளின்றியது சிவ மாம். சிவன் என்பது கல்யாண ரூப ஆத்மாநந்த மாம். சடூர்மி என்பது, தின்னல் குடித்தல்—பிராணனது தர்ம மாம். ஜரா மரணம்—ஸ்தூல தேகத்தின் தர்ம மாம். சோக மோகம்—மநத்தின் தர்ம மாம். இவற்றின் நிவிர்த்தி, லிங்க சரீரத்தின் அபாவத்தி லுண்டாகின்றது. அதனையே உபநிஷத்தில், "லிங்க பங்க முக்தி" என்னும் பெயரால் பிரசித்தஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

பிரசிநம்:— காரணத்தின் நிஷேத மின்றி, ஞாந முண்டாவ தில்லை. நீ எவ்வாறு ஞாநத்தினை யங்கீகரித்தாய்?

உத்தரம்:— அடே வாதி கேட்பாயாக. காரணத்தின் நிஷேதம், சிரவண மநந நிதித்தியாசந மின்றி யுண்டாவ தில்லை. அதுவே முமுக்ஷுவால் செய்யப்படுகின்றது. காரணத்தி னபாவ மின்றி, லிங்க சரீரத்தி னபாவ முண்டாவ தில்லை.

பிரசிநம்:— சிரவண மநந நிதித்தியாசநங்களைச் செய்வதனால், காரணத்தி னபாவம், கருமாதிக ளின்றி யுண்டாவ தில்லை. ஆதலினால், கருமாதிகளின் காரணம் முக்கிய மாம். சிரவணாதிகளினால் ஞாந முண்டாகின்றதென்பதிற் பிரமாணம் யாது?

உத்தரம்:— இதில், சுருதி பிரமாண மாம்.

आत्मा वारे द्रष्टव्यः श्रोतव्यो मंतव्यो निदिध्यासितव्यः ॥

“ஆத்மா வாரே திருஷ்டவ்ய:
சுரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாசிதவ்ய:”

(பிரஹதாரண்யகம் 4—5—6.)

இதன் பொருள்:— ஆத்மா சாக்ஷாத்காரஞ் செய்தற்கு யோக்ய மாம். ஆத்மாவே, சிரவணஞ் செய்தற்கு யோக்ய மாம். ஆத்மாவே, மநநஞ் செய்தற்கு யோக்ய மாம். ஆத்மாவே, நிதித்தியாசநஞ் செய்தற்கு யோக்ய மாம்.

பிரசிநம்:—இச் சுருதியினுல், ஞாநஞ் சித்திப்ப தில்லை. ஏனெனின், முதலில் திருஷ்டவ்ய பதங் கூறப்படுகின்றது. அஃதாவது சாக்ஷாத்கார பதங் கூறப்படுகின்றது; சிரவண மநந நிதித்தியாசந பதங்கள் பின்னர் கூறப்படுகின்றன.

உத்தரம்:— “திருஷ்டவ்ய” என்னும் பதத்தினுல், இவ் வாறு அர்த்தஞ் சித்திக்கும். ஒன்றன் சாக்ஷாத்கார ரூப பலத்தினை முன்ன ரறிவித்து, அதற்குச் சாதந மாகச் சிரவண மநந நிதித்தியாசநங்கள் கூறப்படுகின்றன. ஞாந காண்டத்தி லிதுவே மரியாதை யாம். முன்னர், பலம் அறிவிக்கப்பட்டுப் பின்னர், சாதநம் அறிவிக்கப்படு கின்றது. ஆதலின், காரணத்தி னபாவத்தில் சங்கை பொருந்துவ தில்லை.

18. தலைப் பாகையின் திருஷ்டாந்தத்தினுல் ஞாந நிர்ணயத்தின் யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 19. ஆத்மாநந்தத்தின் நிர்ணயத்தின் யுக்தி.

இப் பொழுது, ஆத்மாநந்தத்தின் நிர்ணயத்தில் பத்தொன்பதாவது யுக்தி கூறப்படுகின்றது.

பிரசிநம்:—முமுக்ஷுவிற்கு ஆத்மாநந்த மெவ்வாறும்? எவ் வாறு ஆத்மாநந்தத்தின் லாப முண்டாகின்றது? அதன் கிரமத்தினைக் கூறுவீராக.

உத்தரம்:— குரு (சித்தாந்தி) கூறுகின்றார். எங்ஙனம்? ஒரு சக்கரவர்த்தி யாகிய ராஜா வாய், பதினாறு வருஷ அள வான ஆயு ளுடையவ ராய், ஒ ரங்கமும் குறை வில்லாதவ ராய், பதி னாறு வய துடைய அதி சுந்தர மான பத்தினி யை யுடையவ ராய், யொருவரும் நாசஞ் செய்ய முடியாத ஆஞ்ஞையை யுடையவ ராய், கஜானாவில், பர்வதம்போன்று மிகுதி யான தன முடையவ ராய், பெரிய சாஸ்திரஞ்ஞரும், தர்மஞ்ஞரும், சர்வ கலையிலும் குசலரும், அதி சுந்தரரும், காம தேவரின் சொரூப முடையவருமா யிருக்கும், புருஷ னுக்கு, மநுஷ்யாநந்தங் கூறப்படுகின்றது. அதினும், ஆயிரங் குணம் அதிக மான ஆநந்தம், பூ லோகத்தி லிருக் கின்றது. அதினும், ஆயிரங் குணம் அதிக மான ஆநந்தம், புவர் லோகத்தி லிருக்கின்றது. அதினும், ஆயிரங் குணம் அதிக மான ஆநந்தம், சுவர்க்க லோகத்தி லிருக்கின்றது. அதினும், ஆயிரங் குணம் அதிக மான ஆநந்தம், மகர் லோகத்தி லிருக்கின்றது. அதினும், ஆயிரங் குணம் அதிக மான ஆநந்தம், ஜந லோகத்தி லிருக்கின்றது. அதினும், ஆயிரங் குணம் அதிக மான ஆநந்தம், தபோ லோகத்தி லிருக்கின்றது. அதினும், ஆயிரங் குணம்

அதிக மான ஆநந்தம், சத்திய லோகத்தி லிருக்கின்றது. அதினும், ஆயிரங் குணம் அதிக மான ஆநந்தம், பிரஹ்ம லோகத்தி லிருக்கின்றது. அதினும், ஆயிரங் குணம் அதிக மான ஆநந்தம், பிரஹ்மாதிகளுக் கிருக்கின்றது. அந்தப் பிரஹ்மாதிகளின் ஆநந்தம், ஆத்மாநந்த ரூப மகா சமுத்திரத்திற்கு ஏக லேச மாத்திரமா யிருக்கின்றது.

பிரசிநம்:— இதிற், பிரமாணம் யாது? பிரஹ்மாதிகட்கோ, பெரிய ஆநந்தங் கேட்கப்படுகின்றது.

உத்தரம்:— ஸ்மிருதி பிரமாண மாம்.

**अखंडानंदरूपस्य तस्यानंदलवाश्रिताः ।**
**ब्रह्माद्यास्तारतम्येन भवंत्यानंदिनो लवाः ॥ आत्म बोधः । ५८॥**

" அகண்டாநந்தரூபஸ்ய தஸ்யாநந்த லவாச்ரிதா:
பிரஹ்மாத்யாஸ்தாரதம்யேந பவந்த்யாநந்திநோ
லவா:" (ஆத்ம போதம் 58.)

இதன் பொருள்:— பிரஹ்மா இந்திரர் முதலியோர் பரிச்சிந்ந ஆநந்த முடையோர். பிரஹ்மம் அகண்டாநந்த மாம். அநுபவ ஆநந்த ஸ்வரூபத்தினால், அபரிச்சிந்ந ஆநந்த சொரூப (ப் பிரஹ்ம) சமுத்திரத்தின் லேசத்தினை யாசிரயித்துப், பிரஹ்மாதிகளும், ஆநந்தத்தின் தார தம்யத்தினால், ஆநந்த முடையோ ராகின்றனர்.

பிரசிநம்:—சுருதியே பிரமாண மாகக் கூறின், உமது வசநம் பிரமாண மாம்.

உத்தரம்:— சுருதியே பிரமாண மாகக் கூறப்படு கின்றது.

**एतस्यैवानंदस्यान्यानि भूतानि मात्रामुपजीवंति ॥**

**(वृहतारण्यकं ॥ ४—३—३२)**

"ஏதஸ்யைவாநந்தஸ்ய அந்யாநி பூதாநி மாத்ரா முபஜீவந்தி" (பிருஹதாரண்யகம் 4—3—32).

இதன் பொருள்:- அந்நியப்பிராணிகள் இதன் ஆநந்தத்தின் லேசத்தினைக் கொண்டே ஆநந்த முடையோ ராகின்றனர்.

19. ஆத்மாநந்தத்தின் நிர்ணயத்தின்
யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 20. தத் பத தொம் பதங்களின் நிர்ணயத்தின் யுக்தி.

இப் பொழுது, தத் பத தொம் பதங்களின் நிர்ணயத் தில் இருப தாவது யுக்தி கூறப்படுகின்றது.

குரு சிஷ்யனுக்குக் கூறினர். ஊத்திநி (மலடு) ரான் டின் (விதவை) சிஷ்யன் நமஸ்காரஞ் செய்து, மகா ராஜாவே! இதன் அர்த்தத்தினை கூறுவீராக. நான் ஊத்திநி ரான்டுக்கு எவ் வாறுனேன்? அவனுக்குக் குரு உபதேசஞ் செய்தனர்.

நீயே ஊத்திநி ரான்டினை யுடையவன். ஏனெனின், புத்தி ரூப ஸ்த்ரீக்கு, ஜீவ ரூப புத்திரனும், ஈசுவர ரூப பதியு மிருந்தனர். அந்த ஜீவ ரூப புத்திரனது ஜீவத்தும்

நாச மாயினது. அதனால், புத்தி ஊத்திரி (மலடு) யாயிற்று. ஈசுவர ரூப பதியி னபாவத்தினால் ராண்ட் (அஃதாவது விதவை) ஆயிற்று. அதனால், தத் பத தொம் பதங் களின் வாச்சியார்த்தினைத் தியாகஞ் செய்து, அசி பத நீயே எஞ்சி யிருக்கின்றாய். இதனால், நீ ஊத்திரி ராண்டின் புத்திர னாய்.

பிரசிநம்:— இதில் பிரமாணம் யாது? பந்தத்தி னின்றும் எவ் வாறு, முக்தி யுண்டாகின்றது?

உத்தரம்:— இதில், ஸ்மிருதி பிரமாண மாம்.

**विज्ञाते साक्षिपुरुषे परमात्मनि चेश्वरे ॥**
**नैराश्ये बंध मोक्षे च न चिन्ता मुक्तये मम ॥**

**(अष्टावक्र गीता)**

"விஞ்ஞாதே சாக்ஷி புருஷே பரமாத்மநி சேசுவரே,
நைராஷ்யே பந்த மோக்ஷே ச ந சிந்தா முக்தயே மம"
(அஷ்டாவக்ர கீதை).

இதன் பொருள்:— தேக, இந்திரியாதிகளின் சாக்ஷி யாய தொம் பதத்தின் லக்ஷியார்த்தத்தினையும், பரமாத்ம ரூப ஈசுவரனது தத் பதத்தின் லக்ஷியார்த்தத்தினையும், (ஒன்று சேர்த்து) "நான் பிரஹ்ம்மா யிருக்கின்றேன்" னென்று சாக்ஷாத்கரிக்கின், நித்ய முத்த சித் ரூப ஆத்மாநுபவத் தினால், பந்த மோக்ஷத்திலும் ஆசை யின்றியதனால், முத்தியின் பொருட்டும், எனக்குச் சிந்தை இல்லை. என்ப தாம்.

பிரசிநம்:— முக்தியின் பொருட்டுச் சிந்தை இல்லை யாயினும், புண்ணிய பாவங்களின் ஸ்பரிசமோ உண்டாம்.

உத்தரம்:— அடே தம்பி கேட்பாயாக. ஞாநிக்குப் புண்ணிய பாவங்களின் சம்பந்த மில்லை. ஏனெனின், ஞாநி விதிக்குத் தாச னுவ தில்லை.

ஸ்மிருதியினு மிது கூறப்பட்டிருக்கின்றது.

**तज्ज्ञस्य पुण्यपापाभ्यां स्पर्शो ह्यंतर्न जायते ॥**
**नह्याकाशस्य धूमेन दृश्यमानापि संगतिः ॥**

"தஜ்ஜ்ஞஸ்ய புண்ய பாபாப்யாம் ஸ்பர்சோ ஹ்ய ந்தர் ந ஜாயதே நஹ்யாகாசச்ய தூமேந திருச்ய மாநாபி சங்கதி:"

இதன் பொருள்:— தத் பத தொம் பதங்களின் லக்ஷியார்த் தத்தின் ஏகத் தன்மையினை யுணர்வோனுக்குப், புண்ணிய பாபங்களோடுகூட அந்தக் கரணத்தின் தர்மங்கள் சம்பந் திப்ப தில்லை. இதில், திருஷ்டாந்தம் கூறப்படுகின்றது:— எங்ஙனம்? நிச்சயமாக, ஆகாசத்திற்குத் தூமத்தோடு கூடப் பார்த்தல் மாத்திரமும் சம்பந்தமில்லை.(தூமம் ஆகாசத்தினை ஸ்பரிசித்ததென்றுபார்த்தல்மாத்திரமேயாம். ஆனல், தூமம் ஆகாசத்தினை ஸ்பரிசிப்ப தில்லை என்பது பொருளாம்).

தார்ஷ்டாந்தம்:— கூறப்படுகின்றது:— அங்ஙனமே. ஆகாச ரூப தத்துவ ஞாநிக்குப் புண்ணிய பாப கர்ம ரூப புகையோடு கூடச் (சம்பந்தம்) கூறுதல் மாத்திரமே யாம். ஆனல், (வாஸ்தவ மாகச்) சம்பந்த மில்லை. தத்துவ

ஞானியைப் புண்ணிய பாபங்கள் ஸ்பரிசிப்ப தில்லை என்பது பொரு ளாம்.

20. தத் பத தோம் பதங்களின் நிர்ணயத்தின் யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 21. சரகா (ராட்டிந) திருஷ்டாந்தத்தினுல் பரமாநந்தப் பிராப்தியின் உபாய யுக்தி.

இப் பொழுது, சரகா (ராட்டிந) திருஷ்டாந்தத்தினுல் பரமாநந்தப் பிராப்தியின் உபாயத்தில் இரு பத்து ஒன்ரு வது யுக்தி கூறப்படுகின்றது.

திருஷ்டாந்தம்:— ஒரு தாய் தனது புத்திரிக்குப் பஞ்சு நூற்பதற்கு ராட்டிநம் சுற்றுதலைப் பழக்கினள், பஞ்சின் குப்பைகளைப் போக்கினள். முதலில் புத்திரி ராட்டிநம் சுற்று மிடத்துக் கம்பி (இழை) கள் ஒரு படித் தாக வர வில்லை. ஒருக் கால் பெரி தாயும், ஒருக் கால் மிருது வாயும், ஒருக் கால் விடுபட்டும் போயிற்று. எப் பொழுது, அவளுக்கு நன்கு நூற்றற்கு வந்ததோ, அப் பொழுது, கம்பி (இழை) பெரி தாயும், மிருது வாயும், விடுபட்டும் போக வில்லை. இருட்டிலும், பிரகாசத்திலும், ஒரே படித்தாக நூ லிழைகளை விட்டனள்.

தார்ஷ்டாந்தம்:— குரு ரூபத் தாய், முமுக்ஷு ரூபப் புத்திரிக்குப், பஞ்சு நூற்றல் ரூப, சங்காத்தின் சோதநம், சுழற்றி (இழை) யாக்குதல் ரூப விசார உபதேசத்தினைச்

செய்தனள். பஞ்சில் உள்ள கொட்டையினை எடுத்தல் ஸ்தாந மாய, அகங்காரம் ராகத் துவேஷ முதலியவற்றை நிவிர்த்தித்தனள். வேத ரூப ராட்டிநத்தில், சங்காத ரூபப் பஞ்சினை, விசார ரூப நூற்றலைச் செய்தனள். தார் (இழை) ஸ்தாந மான தனது சொரூபாநந்தம் உற்பத்தி யாயிற்று. பெரிது மிருது தார் (இழை) ஸ்தாந ரூபம், சம்சய அசம் பாவனைகளாம், இழையின் விடுபடுதல் ரூபம், விக்ஷேபாதிக ளாம். நன்கு நூற்றல் ரூப, யதார்த்த விசாரஞ் செய்யப் பட்டது. அப் பொழுது, இருட்டு வெளிச்ச ரூபப் பிரவிர்த்தி நிவிர்த்திகளில், ஒரே படித்தா யிருத்தல் ரூப ஆநந்தமே யிருந்தது.

பிரசிநம்:— பிரவிர்த்தி நிவிர்த்திகளில், ஏக ரசத் தன்மை இருப்ப தில்லை. இதிற் பிரமாணங் கூறின், யான் அங்கிகரிப் பேன்.

உத்தரம்:— ஸ்மிருதி பிரமாண மாம்.

**प्रवृत्तौ जायते रागो निवृत्तौ द्वेष एव हि।**
**निर्द्वंद्वो बालवद्धीमानेवमेव व्यवस्थितः॥**

"பிரவ்ருத்தௌ ஜாயதே ராகோ நிவ்ருத்தௌ த்வேஷ யேவ ஹி, நிர்த்வந்த்வோ பாலவத் தீமானே வமேவ வியவஸ்திதஃ"

இதன் பொருள்:— விஷயங்களில் ராகத்தோடு கூடிய பிரவிர்த்தி யுண்டாயின், விஷயங்களில் ராகமே உண்டா கின்றது. விஷயங்களில் த்வேஷ பூர்வக நிவிர்த்தி உண்டா யின், விஷயங்களில் துவேஷமே உண்டாகின்றது. இக்

காரணத்தினல், ஞானி பாலனைப் போன்று, சுப அசுப அநுசந்தாந மின்றி, ராகத் துவேஷங்க ளின்றியதனல், ஆநந்த ரூப மாகவே யிருக்கின்முன்.

பிரசிநம்:—பிரவிர்த்தி நிவிர்த்திகளின் வியவகாரமோ பார்க்கப்படுகின்றது. ஞானி எவ் வாறு பிரவிர்த்தி நிவிர்த்தியினை அங்கீகரிப்ப தில்லை?

உத்தரம்:— அடே தம்பி! கேட்பாயாக. பிராரப்தத்தின் வசத்தினல் ஒருக் கால் பிரவிர்த்தியும், ஒருக் கால் நிவிர்த்தியு முண்டாகின்றது. ஆனல், ராகத் துவேஷத்தின் வசத்தினல் ஒருக் காலு முண்டாவ தில்லை.

பிரசிநம்:— நீர் வேதத்தினை ராட்டிந ஸ்தாந மாகக் கூறினீர். வேதத்திற்கு என்ன உபமாந மிருக்கின்றது? இவ் வாருய வசநம் யாண்டும் பிரமாண மாவ தில்லை. வேதமே பிரஹ்ம மென்று பிரமாணம் கேட்கப்படுகின்றது. காரணம் என்னை யெனின், வேதம் பிரஹ்மத்தினைப் பிரதிபாதிக்கின்றது.

உத்தரம்:— (பகவற்) கீதையில் பிரமாண மிருக்கின்றது. அதனைக் கூறுகின்றேன்:—

**त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन ।**
**निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥**

**(भगवत्गीता २—४५)**

"திரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரை குண்யோ பவார்ஜ்ஜுந, நிர்த்வந்த்வோ நித்ய சத்வஸ்தோ நிர்யோக க்ஷேம ஆத்மவாந்" (பகவற் கீதை 2—45).

இதன் பொருள்:— முக் குண ரூப சகாம புருஷனுக்கு, முக் குண ரூப கர்ம பலத்தினை வேதம் பிரதிபாதிக்கின்றது. இதனால், அர்ஜ்ஜுனா! நீ முக் குணங்களின் விருப்ப மின்றியவ னாகுக.

நிஷ்காமத்தி லுபாயங் கூறப்படுகின்றது. சுகம், துக்கம், சீதோஷ்ணம் முதலிய துவந் துவங்களைச் சகித்தல், துவந் துவ ரகித மாம்.

எவ் வா றிதனைச் சகிக்கின்ற தென்று கேட்கின், அது கூறப்படுகின்றது. நித்திய சத்துவ குணத்தி லிருத்தலினால், தைரியத்தினை யவலம்பித்துச் சகித்தலினால், யோக க்ஷேமங்க ளின்றியவ னாகின்றாய். அப்பிராப்த வஸ்துவின் அங்கிகாரம் யோக மெனப்படும். அடைந்த வஸ்துவினை ரக்ஷித்தல் க்ஷேம மெனப்படும். அவ் வாறே பிரமாத மின்றியவ னாகுக என்ப தாம்.

பிரசினம்:— இவ் வாறாய, ஞானம் தனது விசாரத் தானே யுண்டா மாயின், பின்னர், குருவிற்கு யாது பிரயோசன முளது?

உத்தரம்:— சிஷ்யன் எவ் வாறாய சாஸ்திரஞ்ஞ னாயி னும், குரு வின்றி ஞான முண்டாவ தில்லை.

பிரசினம்:— இதற்குப் பிரமாணங் கூறுக? அந்தப் பிரமாணம், சுருதி ஸ்மிருதிகளின் அங்கிகார மாயின், அங்கிகரிப்பேன்.

உத்தரம்:— அடே சிஷ்யனே! சுருதி ஸ்மிருதிகளே பிரமாண மாகக் கூறுகின்றேன் கேட்பாயாக.

**नैषा तर्केण मतिरपनेया प्रोक्तान्येनैव सुज्ञानाय प्रेष्ठा ॥**

**(कठ श्रुति १—२—९)**

"நைஷா தர்க்கேண மதிரபநேயா புரோக்தாந்யே நைவ சுக்ஞாநாய பிரேஷ்டா" என்பது (கட 1-2-9) சுருதி யாம்.

இதன் பொருள்:— நசிகேதாவே! இந்தப் பிரஹ்மத்தினை விஷயஞ் செய்யும் புத்தி, மூலப் பிரமாண மின்றிய வெறுந் தர்க்கத்தினுல் அடையத் தகுந்த தன்று. ஆயின், எவ் வா றடையப்படுகின்ற தெனின்? கூறுகின்றேன். சர்வஞ்ஞ குருவால் யுக்தி திருஷ்டாந்த பூர்வகம் உபதேசஞ் செய்யப்படின், நன்கு பிரஹ்மத்தினை விஷயஞ் செய்யும் வித்தை, அவித்தையி னிவிர்த்தியின் பொருட் டிருக்கின்றது.

இக் கட வல்லி சுருதி பிரமாணமாம். இது முதலிய வேறு சுருதிகளும் கூறுகின்றன.

ஸ்மிருதியினையுங் கேட்பாயாக.

**आचार्येभ्यो लब्ध सुसूक्ष्माच्युत तत्वा**
**वैराग्येणाभ्यासबलाच्चैव द्रृढिम्ना ।**
**भक्त्यैकाग्रध्यानपरा यं विदुरीशं**
**तं संसारध्वांतविनाशं हरिमीडे ॥ (हरिमीडे ५)**

"ஆச்சார்யேப்யோ லப்த சுசூக்ஷ்மாச்யுத தத்வா
வைராக்யேணாப்யாசபலாச்சைவ திருடிம்நா,
பக்தியைகாக்ர தியாநபரா யம் விதுரீசம்
தம் சம்சார துவாந்தவிநாசம் ஹரிமீடே"
(ஹரிமீடே 5).

இதன் பொருள்:— ஆச்சாரியரால் அறியப்பட்ட அதி சூக்ஷம அச்சுத தத்துவத்தினால், உண்டாய வைராக்ய அப்யாச (சிரவண) த்தினால், அடைந்த பல ரூப மநநங் களினா லுண்டாய திடமான பக்தியினால், ஏகாக்ர தியாந நிதித்யாசத்தில், தத்பரரா யிருக்கும் சாதுக்கள், சம்சார சம்பந்த மான அஞ்ஞாநத்தினை நாசஞ் செய்யும், பரமாத்மாவின் சொரூபத்தினைச் சாக்ஷாத்கரிக்கின்றன ரோ, அந்த ஹரியை நான் ஸ்துதிக்கின்றேன்.

ஆதலின், சிஷ்யனே! நீ பரமாநந்த ரூபனே யாவாய், உன்னிடத்தில் விகல்பத்தின் சம்பவ மில்லை.

21. சரகா (ராட்டிந) திருஷ்டாந்தத்தினால் பரமாத்மாவின் பிராப்தி உபாயத்தின் யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 22. ஞாந ரூபப் புத்திர நிர்ணயத்தின் யுக்தி.

இப் பொழுது, ஞாந ரூபப் புத்திர நிர்ணயத்தில் இருபத் திரண்டாவது யுக்தி கூறப்படுகின்றது.

திருஷ்டாந்தம்:— ஒரு புருஷன் ஒரு மகா புருஷனைப், புத்திரன் பொருட்டுச் சேவை செய்தான். அவன், "உனக்குப் புத்திரப் பே றுண்டாகு" மென்று கூறினன். அப் புருஷனுக்குப் புத்திர னுண்டாயினன். பின்னர், அவன் பிரார்த்தனை செய்து, "எனக்குப் புத்திர னுண்டாக வேண்டு" மென்று கேட்டனன். மகா புருஷன், "உனக்கு இப் புத்திரனே உண்டாவ" னென்று கூறினன். பன் முறை பிரார்த்தனை செய்ததனால், "உனக்கு இப் புத்திரனே உண்டாவ" னென்று இவ் வாறே கூறினர்.

பிரசினம்:— மகா ராஜாவே! புத்திரனோ உண்டாய் விட்டனன். பின்னரும் "இப் புத்திரனே உண்டாவ" னென்று கூறினீர்கள். இவ் வசநம் எனக்கு விளங்க வில்லை.

உத்தரம்:— பிதாவினை நரகத்தி னின்றுங் கடப்பிப் போனே புத்திர னவன். அப் புத்திரன், இப் பொழுதே புத்திர தர்மத்தினை யடைய வில்லை. இதனல், பன் முறை, "உனக்கு இப் புத்திரனே யுண்டாவ" னென்றே கூறப் பட்டது.

தார்ஷ்டாந்தம்:— முமுக்ஷுவின் விஞ்ஞாபத்தினைக் கேட்டுத், தத்வமசி வாக்ய ரூப ஞாநத்தின் உபதேசஞ் செய்யப்பட்டது. அதுவே ஞாந ரூபப் புத்திர னும். ஆனல், அப் புத்திரன் சாமாநிய மாக உண்டாயிருக்கின்றனன். அவனுக்கு யதார்த்தமாய்ச் சம்சய நிவிர்த்தி யாக வில்லை. இதனல், பின்னரும் ஞாந ரூபப் புத்திரனது இச்சா ரூபப்

பிரசிநம், சம்சய நிவிர்த்தியின் பொருட்டுச் செய்யப் பட்டது. அடிக் கடி குரு உபதேசஞ் செய்தல், சிஷ்யனது திடத் தன்மையின் பொருட்டாம். அவ் அப்யாசத்தின் திடத்தினால், அந்த ஞாநமே பரிபாகத்தினை அடைகின்றது. எங்ஙனம்? அப் புத்திரன், புத்திர தர்மத்தினை யடைந்து, பிதாவினை நரகத்தி னின்றும் தாண்டச் செய்கின்றனனோ, அங்ஙனமே, இந்த ஞாந ரூபப் புத்திரன், ஜீவ ரூபப் பிதாவை ஜநந மரண ரூப நரகங்களி னின்றும் தாண்டச் செய்கின்றனன்.

பிரசிநம்:-- இதிற் பிராமணம் யாண் டிருக்கின்றது?

உத்தரம்:— ஸ்மிருதி பிரமாண மாம்.

**पुन्नाम नरकाद्यो वै त्रायते स तु पुत्रकः ॥**

"பும் நாம நரகாத் யோவை திராயதே ச து புத்ரக:"

இதன் பொருள்:— பும் என்னும் பெயரை யுடைய நரகத்தி னின்றும் கடப்பிப்போன் புத்திர னவன்.

பிரசிநம்:— ஆண்டோ ஸ்த்ரீயி னின்றும் புத்திரன் உண்டாயினன். சண்டு எந்த ஸ்த்ரீ இருக்கின்றாள்?

உத்தரம்:—வியவசாய சொரூபப் புத்தி ரூப ஸ்த்ரீக்குப் புத்திர னுண்டாயினன். பதிவிரதா ஸ்த்ரீக்கு உண்டாகும் புத்திரன் பிதாவிற்குக் கல்யாணஞ் செய்கின்றனன். வியபிசாரி ரூப அவ்வியவசாய ரூபப் புத்தியி னின்றும் உண்டாம் ஞாந ரூபப் புத்திரன், கட படாதி ரூப அநேக

ஞானமா யிருக்கின்ருன். அவன் சைதந்ய ரூபப் பிதாவின் கல்யாணத்திற்குக் காரண மாவ தில்லை.

பிரசிநம்:— வியவசாய ரூப, அவ்வியவசாய ரூபப் புத்தியின் நிர்ணயத்திற் பிரமாணம் யாது?

உத்தரம்:— ஸ்மிருதி பிரமாண மாம்.

ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதையில் கூறியிருக்கின்றனர்.

**व्यवसायात्मिका बुद्धिरेकेह कुरु नंदन।**

**बहुशाखा ह्यनंताश्च बुद्धयोऽव्यवसायिनाम्॥**

**(भगवत्गीता २—४१)**

"வியவசாயாத்மிகா புத்திரேகேஹ குரு நந்தந, பஹுசாகா ஹ்யநந்தாஸ்ச புத்தயோவ்வியவசாயி நாம்" (பகவற் கீதை 2—41.)

இதன் பொருள்:— அர்ஜ்ஜுநனே! இந்த ஜகத்தில் வியவசாய ரூபப் (சுத்த) புத்தி ஒன்றே யாம். அநேக சாகைக ளுடைய அநந்தப் புத்தி, அவ்வியவசாயிகட் குண்டா கின்றது.

பிரசிநம்:— முன்னர் நீர், "முதலில் சாமாநிய மாக ஞாந முண்டாகின்றது. பின்னர், விசேஷ மாக ஞாந முண்டாகின்றது" என்று கூறினீர். இதிற் பிரமாணம் யாது?

உத்தரம்:— திருஷ்டாந்தம்: எங்ஙனம்? முதலில், சூரியனது பிம்பம் உதய மாகின்றது. அஃது அருண னும். அதன் பிரகாசம் சாமாநிய மாக விருக்கின்றது.

அதற்கு அந்தகாரத்தை யதார்த்தமாக நிவிர்த்தி செய்ய ஆற்றலில்லை. விசேஷப் பிரகாச முண்டாங் காலத்தில், அஃது எல்லா இருளினையும் நிவிர்த்தி செய்கின்றது. இவ் வாறே தார்ஷ்டாந்தத்தினு முணர்க.

பிரசிநம்:— இதிற் பிரமாணங் கூறுவீராக.

உத்தரம்:— இதில் ஸ்மிருதி பிரமாண மாம்.

**अरुणेनेव बोधेन पूर्वं संतमसि द्रुते ।**

**तत आविर्भवेदात्मा स्वयमेवांशुमानिव ॥ (आत्म बोधः ४३)**

"அருணேனேவ போதேந பூர்வம் சந்தமசி த்ருதே,
தத ஆவிர்ப்பவேதாத்மா சுவயமேவாம்சுமாநிவ"
(ஆத்ம போதம் 43)

இதன் பொருள்:— ஜீவாத்ம பரமாத்மாக்களின் ஐக்ய ஞானத்தினால், முன்னர் அஞ்ஞானத்தின் நாச முண்டாகின்றது. அஞ்ஞானத்தின் நாச முண்டான பின்னர், ஆத்மா தானே உதய மாகின்றது. ஈண்டுத் திருஷ்டாந்தங் கூறப்படுகின்றது. எங்ஙனம்? அருணனது பிரகாசத்தினால், முன்னர் இருளினது நாச முண்டாகின்றது. அதன் பின்னர், சூரியன் தானே உதய மாகின்றது. அவ் வாறே ஆத்மாவினையு முணர்க.

22. ஞாந ரூபப் புத்திரன் நிர்ணயத்தின்
யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 23. கருத்திருத்வ போக்திருத்வ நிர்ணயத்தின் யுக்தி.

இப்பொழுது, கருத்திருத்வ போக்திருத்வ நிர்ணயத்தில், இருபத்து மூன்ருவது யுக்தி கூறப்படுகின்றது.

சித்தாந்தி விசாரஞ் செய்கின்ருர்:— கருத்திருத்வ போக்திருத்வங்கள், யாரால் சேர்க்கப்பட்டிருக்கின்றது? ஈசுவரனுல் சேர்க்கப்பட்டிருக்கின்றதெனின், சேர்ப்போன் ஈசுவரனுவன். ஆயினிச் சீவன், எவ்வாறு போக்தாவாவன்? ஈசுவரன் மகானுயிருக்கின்ருன். இதனுல், பலாத்காரத்தினுல் சேர்ப்பித்தானென்று கூறின், கருத்திருத்வ போக்திருத்வங்களைச் சேர்ப்பிப்போனுல் எங்ஙனம் கல்யாண முண்டாம்? ஈசுவரன் கல்யாணமுஞ் செய்வனென்று ஒருவன் கூறின், புருஷார்த்தமோ நாசமாயிற்று. இதனுல், கருத்திருத்வ போக்திருத்வங்கள் ஈசுவரனுல் சேர்ப்பிக்கப்படுவன வல. ஏனெனின், ஈசுவரனுல் சேர்ப்பிக்கப்படும் வஸ்துவின் அபாவஞ் செய்வதற்கு ஓர் உபாயமுமில்லை. இருக்கின், ஞாந காண்டம் பொருந்தாது. ஞாநம் பொருந்தாதாயின், கர்ம உபாசனைகளும் பொருந்தா. இதனுல், வேதத்திற்கு வியர்த்தத் தன்மை வரும். ஈசுவரன், "சிலர்க்குக் கருத்திருத்வ போக்திருத்வங்களைச் சேர்ப்பிக்கின்றனன். சிலர்க்குச் சேர்ப்பிப்பதில்லை" என்று ஒருவன் கூறின், ஈசுவரனிடத்தில் "நிக்கிருணை (நிர்த்தய) த் தன்மை, விஷமத் தன்மை" யென்னுமிரண்டு தோஷங்களுண்டாம்.

பிரசிநம்:— வாதி கூறுகின்ருன். நிக்கிருணைத் தன்மை, விஷமத் தன்மை யென்பன யாவை?

உத்தரம்:— நிக்கிருணைத் தன்மை யென்பது, உற்பத்தி காலத்தில், ஜகத்தினைத் தானாகச் செய்தலும், பிரளய காலத்தில், தனை யின்றித் தன்னிடத்தில் லயஞ் செய்தலு மாம். விஷமத் தன்மை யென்பது சிலருக்குத் துக்கத்தினையும், சிலருக்குச் சுகத்தினையுங் கொடுத்தலாம். ஈசுவரனே தோஷ மின்றியவனையும், ஞான சொரூபனையு மிருக்கின்றான். இதனால், ஈசுவரனிடத்தில் தோஷங் கூறுதல் அநர்த்த அடை வாம்.

பிரசிநம்:— உண்மையே, "கருத்திருத்வ போக்திருத் வங்கள் அவித்தையினாற் செய்யப்பட்டன" வென்று அங்கீகரிக்குக.

உத்தரம்:— அடே! தம்பி கேட்பாயாக. அவித்தை யினாலும் செய்யப்பட்ட தன்று, முதலில் அவித்தையோ அவஸ்து வாம்; நிர்விகல்பமு மாம். அவித்தையின் பெயரே கூடஸ்த (நிர்விகார) மாம்.

பிரசிநம்:—நீரோ, "கருத்திருத்வ போக்திருத்வங்கள் அவித்தையினாற் செய்யப்பட்டன வன்" றென்று கூறு கின்றீர். ஆயின், ரஜ்ஜுவில் அஞ்ஞானத்தினால் சர்ப்பத் தின் தோற்றம் உண்டாகின்றதா? இல்லையா?

உத்தரம்:— அடே! வாதி கேட்பாயாக. மிகுந்த இருட்டில் காயிறும் பார்க்கப்படுவ தில்லையாயின், சர்ப்பத் தின் விகல்பம் எங் கிருந்து வந்தது?

பிரசிநம்:— நீர், "அவித்தை வஸ்து வன் றென்" றங்கிகரிக்கின், அவித்தையின் காரிய வர்க்க மான ஜகத்தினை யெங்ஙன மங்கிகரித்தீர்?

உத்தரம்:— அடே! தம்பி கேட்பாயாக. காரண மோ நிர்விகல்பமே யாம். காரணத்தி லுண்டாம் வஸ்துத் தோற்றுவ தில்லை, காரியத்தில் வரும்போது விளங்கு கின்றது.

பிரசிநம்:— இதில், ஒரு யுக்தி கூறுவீ ராயின், உமது வசநத்தினை அங்கிகரிப்பேன்.

உத்தரம்:— எங்ஙனம், ஆல விருக்ஷத்தின் காரணம் பீஜ மாம். ஆனால், பீஜத்தில் ஆல விருக்ஷம் பார்க்கப் படுவ தில்லை. பீஜத்தினைப் பிளந்து பார்க்கினும், யாண்டும் பச்சை (முளை) யின் பெயரு மில்லை. பின்னர், அப் பீஜத்தினின்றும் விருக்ஷ முண்டாம் போது, "இஃது ஆல விருக்ஷ" மென் றறியப்படுகின்றது.

பிரசிநம்:— உண்மையே, உமது வசநத்தானே 'கருத் திருத்வ போக்திருத்வங்கள் அவித்தையினுற் செய்யப் பட்ட' தென அடையப்பட்டது.

உத்தரம்:— அடே! தம்பி கேட்பாயாக. கருத்திருத்வ போக்திருத்வங்களின் காரணம் வேறே யிருக்கின்றது, அவித்தை யன்றும். நான் காரண காரியங்கட்கு, ஆல விருக்ஷ, பீஜத்தின் திருஷ்டாந்தங் கொடுத்தது, அவித்தைக் கன்றும். இந்தக் கருத்திருத்வ போக்திருத்வங்களின்

காரணம் திருஷ்டாந்தமாகக் கொடுக்கப்பட்டது. ஆதலின், கேவலம் அவித்தையினால் கருத்திருத்வ போக்திருத்வங்கள் பொருந்துவதில்லை. அவித்தை சைதந்ய மென்னு மிரண்டோடு கூடிய ஈசுவரனாலு முண்டாவதில்லை.

பிரசினம்:— ஆயின், சுத்தப் பிரஹ்மத்தி னின்றாம் உண்டாம்.

உத்தரம்:— சுத்த மென்பது நிர்விகற்பத்திற் காம். நிர்விகற்பத்தில் விகற்பம் ஒரு போதும் பொருந்துவதில்லை.

பிரசினம்:— 'கருத்திருத்வ போக்திருத்வங்கள் கர்மத்தினாற் செய்யப்பட்டன' வென்று நான் உணர்கின்றேன்.

உத்தரம்:— கர்மமோ, சைதந்யத்தின் பூர்வம் இருந்ததே இல்லை. ஆதலினால், கர்மத்தினாலு மில்லை.

பிரசினம்:— மகா ராஜாவே! ஆயின், நீரே நிர்ணயஞ் செய்து கூறுவீராக.

உத்தரம்:— இந்தச் சைதந்யம் தானே சுவாபாவிகமாக அங்கிகரிக்கப்பட்டது, எவராலும் செய்யப்பட்டதில்லை. காரண மென்னை யெனின், கருத்திருத்வ போக்திருத்வங்கள் வாஸ்தவமாக வில்லை. அடே வாதி! கருத்திருத்வ போக்திருத்வங்கள் வாஸ்தவமாக விருக்குமாயின், எவராலும் நிவிர்த்தி செய்யப்படின், நிவிர்த்தியாகா. ரச்சுவி னிடத்தில் சர்ப்பம் வாஸ்தவமாக எவராலாவது செய்யப்பட்டிருப்பின், எவ்வாறு நிவிர்த்தியாம்?

சர்ப்ப மின்றியே சர்ப்பத்தின் தோற்ற முண்டாகின்றது. இதனை நீ பார்ப்பாயாக. சைதந்ய புருஷனுக்குச் சர்ப்பம் சுயமாகவே விளங்குகின்றது. சுவாபாவிகமாகவே சர்ப்பத் தோற்றம் உண்டாகின்றது. ரச்சுவில் சர்ப்பம் ஈசுவரனுற் செய்யப்பட்டதா? அஞ்ஞானத்தினுற் செய்யப்பட்டதா? சுத்தப் பிரஹ்மத்தினுற் செய்யப்பட்டதா? கர்மத்தினுற் செய்யப்பட்டதா? நீயே கூறுவாயாக.

பிரசிநம்:— ரஜ்ஜுவில் சர்ப்பம் எப் பொழுது தோன்றுகின்றதோ, அதற்குப் பூர்வம் உண்மைச் சர்ப்பத் தினைப் பார்த்திருக்கின்ருன், அந்த உண்மைச் சர்ப்பம் ஒருவனுற் செய்யப்பட்ட தாம்.

உத்தரம்:— நீ கூறுவது பொருந்தாது. உனது கூற்றில் இரண்டு ஞானம் வேண்டும். எவ் வாருவது ரஜ்ஜுவில் சர்ப்பத்தினைப் பார்க்கின்றவர்கள், "எங்ஙனம்? சர்ப்பத்தினை நான் முன்னர் பார்த்தேனே, அவ்வாறே இந்தச் சர்ப்ப மிருக்கின்ற" தென்று கூறவேண்டும். இவ் வாறு கூறினே, "முன் சர்ப்பத்தின் ஞானமும், இந்தச் சர்ப்பத்தின் ஞானமு" மென்று இரண்டு ஞான முண்டாம். இவ் வாறு, ஒருவருங் கூறுவ தில்லை. "இந்தச் சர்ப்பம் பெரிதா யிருக்கின்றது" என்று கூறுகின்றனர். பொய் யாகவே சர்ப்பம் தோற்றுகின்றது. வேறு வகைத்தாகவுங் கேட்பாயாக. ஆகாசத்தில் நீலத் தன்மை தோற்றுகின்றது, அந்த நீலத் தன்மை, ஆகாசத்தில் முன்னர் யாண்டுப் பார்க்கப்பட்டது? இதனுல், கருத்திருத் தன்மை, போக் கிருத் தன்மை பொய்யாகத் தோற்றுகின்றன. இதனுல்,

தன்னைக் கர்த்தா போக்தா வாக அங்கிகரித்தனன். இது யதார்த்த நிர்ணைய மாம். விசாரஞ் செய்யு மிடத்து கருத்திருத் தன்மை போக்திருத் தன்மைகளின் கந்தமும் அகப்படுவ தில்லை. அவை யிருப்பின் யாண்டுச் சென்றன?

பிரசிநம்:— இந்தச் ஜீவன் தன்னையே கர்த்தா போக்தா வாக அங்கிகரிக்கின், நிவிர்த்தி எவ் வாறும்? காரண மென்னை எனின், உமது கூற்றில் இந்த நிர்ணைய முண்டா கின்றது:- கர்மத்தினைச் செய்வதில் சுதந்தரனு யிருக் கின்றுன். ஆனுல், அநுபவிப்பதில் பரதந்திரனு யிருக் கின்றுன். ஆதலின், தானுக நிவிர்த்தி எவ் வா றுண்டாம்? தன்னுலேயே எவ் வாறும் நிவிர்த்தி யாவ தில்லை.

உத்தரம்:— ஞாநத்தினுல் நிவிர்த்தி யாகின்றது.

பிரசிநம்:— ஆயின், வேறு ஞாநத்தின் சகாயத்தினை அங்கிகரித்தீர்.

உத்தரம்:— அடே! வாதி என தபிப்பிராயத்தினை உணர்ந்தா யில்லை. அடே நானே அறியப்பட்ட சொருப மாகவே யிருக்கின்றேன். நீ வேறென்றன் சகாயத்தினை எவ் வாறு கூறுகின்றுய்?

பிரசிநம்:— நீர் ஞாநத்தினுல் நிவிர்த்தி அங்கிகரிக் கின்றே, அஞ்ஞாநத்தினுல், கருத்திருத் தன்மை, போக் திருத் தன்மைக ளுண்டாவதனையு மங்கிகரிப்பீராக.

உத்தரம்:— அஞ்ஞாநம் ஜட மாம். ஞாநம் சைதந்நிய மாம். எவ் வாறு பூமியி (தச்ச) னது காரியம் ஸ்தம்பத்தினுல்

பொருந்துவ தில்லையோ, அங்ஙனமே, சைதந்யத்தின் காரியம், ஜடத்தினல் பொருந்துவ தில்லை.

பிரசிநம்:— ஆயின், நான் கூறுவதாவது:- ஈசுவரனுல், கருத்திருத்வ போக்திருத்வங்க ளுண்டாயின், ஈசுவரனை நீர் ஜட மாக அங்கிகரிக்கின்றீரா? எல்லோரது மதத்திலும், ஈசுவரன் சைதந்நிய மாகவே அங்கிகரிக்கப்படுகின்றது. ஆதலின், உமது கூற்றுனே கருத்திருத்வ போக்திருத்வங்கள், ஈசுவரனுற் செய்யப்பட்டன வென்பது பொருந்துகின்றது.

உத்தரம்:— அடே! வாதி நீ மிக மறதி யுடையவ ஞயினுய். "கருத்திருத் தன்மை, போக்திருத் தன்மை ஈசுவரனுற் செய்யப்பட்டன" வென்று அங்கிகரிக்கின், ஈசுவர னிடத்தில் மீண்டும் தோஷ முண்டாம். இது முன்னரே என்னுல் கூறப்பட்டிருக்கின்றது. இதனுல் உன்னுற் கூறப்பட்ட யாவும் எப் பொழுது பொருந்தும்? சில கருத்திருத் தன்மை போக்திருத் தன்மைகள் வாஸ்த்வ மாயின், பொருந்தும். நீ திருஷ்டியினுற் பார்ப்பாயாக. கருத்திருத் தன்மை போக்திருத் தன்மைக ளிவ்வாறு தோற்றுகின்றது. எங்ஙனம்? ஜலத்தில் தரங்கந் தோற்றுகின்றது. அந்தத் தரங்கமோ அற்பமும் உண்மை யாக வில்லை.

பிரசிநம்:— உண்மையே. இதில் ஒரு பிரமாணம் கூறுவீராக.

உத்தரம்:— இதில் ஸ்மிருதி பிரமாண மாம்.

**त्वय्यनंत महाम्भोधौ विश्ववीचिः स्वभावतः।**
**उदेतु वास्तमायातु न ते वृद्धिर्न वा क्षतिः॥**

"த்வய்யநந்த மஹாம்போதௌ விசுவவீச்சி:
ஸ்வபாவத: ,
உதே து வாஸ்தமாயாது ந தே விர்த்திர்ந வா க்ஷதி:"

இதன் பொருள்:— உனது அநந்த மகா சமுத்திரத்தில், ஜகத் ரூப அலை சுவாபாவ மாக உண்டாகின்றது. அல்லது, லயத்தினை அடைகின்றது. ஆனால், உனக்கு விர்த்தியு மில்லை, நாசமு மில்லை.

பிரசினம்:— ஒரு சுருதி கூறுவீராக.

உத்தரம்:— **अयमात्मा ब्रह्म** "அயமாத்மா பிர்ஹ்ம"

இதன் பொருள்:— இவ் வாத்மா பிர்ஹ்ம மாம்.

இவ் வாறு கூறியதனால், கருத்திருத் தன்மை, போக்திருத் தன்மைகள், வாஸ்தவ மல வென்று சித்த மாயிற்று.

23. கருத்திருத் தன்மை, போக்திருத் தன்மை
நிர்ணயத்தின் யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 24. ஸ்வதப் பிரமாண, பரதப் பிரமாண நிர்ணயத்தின் யுக்தி.

இப் பொழுது, ஸ்வதப் பிரமாண, பரதப் பிரமாண நிர்ணயத்தில்: இரு பத்து நான் காவது யுக்தி கூறப்படு கின்றது.

பிரசிநம்:— வாதி கேட்கின்றான். ஆத்மா ஸ்வதப் பிரமாணமா? அல்லது, பரதப் பிரமாணமா? நீர் "ஆத்மா ஸ்வதப் பிரமாண" மென்று கூறுவீ ராயின், வேதத்தில், தத் துவ மசி முதலிய வாக்கியங்களைக் கொண்டு, வேதத்தில் சப்த முதலியவற்றிற்குப் பிரமாணங் கூறப்படுகின்றமையின், வேதத்திற்கு வியர்த்தத் தன்மை வரும். "பரதப் பிரமாணமா" மென்று நீர் கூறுவீ ராயின், கிரிசிய மாம், வே றென்றாற் சித்தஞ் செய்யப்படின் சித்த மாம்.

உத்தரம்:— அடே! தம்பி ஆத்மா ஸ்வதப் பிரமாண மாம். ஆத்மாவினை உணர்வதில், மநம் வாக்கு முதலிய ஒன்றும் காரண மன்றாம்.

பிரசிநம்:— இதிற் பிரமாணம் யாது?

உத்தரம்:— ஸ்மிருதி பிரமாண மாம்.

**जाति गुणक्रियासंवंधाः शव्दप्रवृत्तिनिमित्त चतुष्टयं । शव्दप्रवृत्तिनिमित्तानां तेषां व्रह्मण्यसत्वेन तस्मिन् शव्दाऽप्रवृत्तिरिति विभावनीयं ॥**

"ஜாதி குணக் கிரியா சம்பந்தா: சப்தப் பிரவிர்த்தி நிமித்தசதுஷ்டயம், சப்தப் பிரவிர்த்தி நிமித்தாநாம், தேஷாம் பிரஹ்மண்யசத்வேந தஸ்மிந் சப்தாப்ர விர்த்தி ரிதி விபாவநீயம்"

இதன் பொருள்:— ஜாதி குணம் கிரியை சம்பந்தம் என்னும் நான்கும் சப்தப் பிரவிர்த்தியின் நிமித்தங்களாம். சப்தப் பிரவிர்த்திக்கு நிமித்த மாய அவை, அப்

பிரஹ்மத்தி லின்மையின், அதில் சப்தத்தின் பிரவிர்த்தி யில்லை என்று விசேஷ மாகப் பகுத் துணர்தற்கு யோக்கிய மாம்.

பிரசிநம்:— ஜாதி குணக் கிரியா சம்பந்தங்களை நான் உணர வில்லை. ஸ்பஷ்ட மாகப் பிரமாணத் தோடு கூறுவீராக.

உத்தரம்:— எங்ஙனம்?

**" गौः शुक्लो धावति भारवाह ॥ "**

"கௌ: சுக்லோ தாவதி பாரவாஹ:"

இதன் பொருள்:— எங்ஙனம்? ஜாதி என்பது பசு வாம். குண மென்பது வெண்மை யாம். கிரிபை என்பது ஓடுத லாம். சம்பந்தம் என்பது பாரத்தினைச் தூக்குத லாம். இந்த நான்கும், சப்தத்தின் பிரவிர்த்தியின் நிமித்த மாம். வேதத்திற்கு வியர்த்தத் தன்மை வருகின்ற தென்று நீ கூறியது பொருந்தாது. காரணம் யாதெனின், வேதம் சகுண பர மாம். சகுணத்தினையே கூறுகின்றது. ஆனால், சகுணத்தினைக் கூறுவதனால், நிர்க் குணத்தின் லக்ஷண முண்டாகின்றது. 'இது' வென்னும் சப்தத்தினால், இது பிரத்தியக்ஷமா மென்று கூறுவ தில்லை. ஆனால், * சந்திர சாகா நியாயத்தினால் கூறுகின்றது.

---

* நண்டுச் 'சாகையில் சந்திரன் இருக்கின்றான்' என்று அறிவிக்கின், முதலில் சாகையைக் காண்பித்து, பின்னர் சந்திரனை அறிவித்த லாம். சந்திரனைக் காண்பிப்பதிலேயே அபிப் பிராய மாம். இதனைச் சாகா சந்திர நியாய மென்பர்.

பிரசிநம்:— இதிற் பிரமாணம் யாது?

உத்தரம்:— சுருதி பிரமாண மாம்.

**" नेति नेतीति शेषितं यत्परं पदं ॥ "**

"நேதி நேதீதி சேஷிதம் யத் பரம் பதம்"

இதன் பொருள்:— ஈது மன் றீது மன் றென்று நிஷேதஞ் செய்து செய்து, எந்தப் பரம பதம் எஞ்சி யிருக்கின்றதோ.

இதனுல், வேதத்திற்கும் வியர்த்தத் தன்மை வருவதில்லை. ஆத்மா ஸ்வதப் பிரமாண சித்த மாம். இதனுல், சப்தப் பிரமாணம் அங்கிகரிக்கப்படுகின்றது. பரம்பரை வாயிலாகச் சகுணத்தினை நிஷேதஞ் செய்து, நிர்க் குணம் எஞ்சுகின்றது. இதில் புருஷார்த்தமும் சித்தித்தது. புருஷார்த்தம் அங்கிகரிக்கப்படாவிடினே, பிராரத்தத்தின் மீது ஞாந மிருக்கின்றது. அந்தப் பிராரத்தத்தினுல் ஞாந முண்டாயினே, ஞாந காண்டம் அடிபட்டுப் போம். ஞாந காண்டாம் அடிபட்டுப் போயின், வேதத்திற்கு வியர்த்தத் தன்மை யுண்டாம்.

பிரசிநம்:— ஞாந காண்டம் அடிபட்டுப் போயின் போகுக; வேதத்திற்கும் வியர்த்தத் தன்மை வருக. காரணம் யா தெனின், வேதமும் சங்காதமே யாம். வேதம் சைதந்ய மாயின், ஒன்று, சைதந்நிய மாம்; இரண் டாவது, வேதமும் சைதந்நிய மாம். இவ் வாருயின், துவைதப் பிராப்தி யாம். இதனுல், வேதத்தினை அங்கிகரிக்கின், வேதத்தின் கர்த்தா ஈசுவர னுவன். ஆயின், அவ் வீசுவரனை அங்கிகரிக்க வில்லை.

உத்தரம்:— அடே வாதி! நான் ஈசுவரனையும் அங்கீகரிப்ப தில்லை. எனக்குத் துவைதப் பிராப்தியு முண்டாக வில்லை; அத்வைதமே சித்திக்கின்றது. நான் ஈசுவரனை அங்கிகரிக்கினே, சத்திய மாக அங்கிகரிப்பதில், எல்லாப் பிரபஞ்சத்திற்கும் சத்தியத் தன்மை வரும். காரணம் என்னை எனின், சத்தியத்தின் சிருஷ்டி, சத்தியமே யாதல் வேண்டும்.

பிரசினம்:— ஈசுவரனே, தியாகாதிகளின் வியாபாரத் தினல், பிரஹ்ம சொரூப மாகவே பிராப்த மாகின்ருன். நீர் எவ் வாறு கபோல கற்பித மாக அபாவஞ் செய்கின்றீர்?

உத்தரம்:— நான் கபோல கற்பித மாக அங்கிகரிப்ப தில்லை. சுருதி பிரமாண மாம்.

यन्मनसा न मनुते येनाहुर्मनो मतं ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥ (केनोपनिषत् १-५)

"யந் மநசா ந மநுதே யேநாஹுர் மநோ மதம், ததேவ பிரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதம் உபாசதே:" (கேநோபநிஷத் 1—5.)

இதன் பொருள்:— எதனை மநத்தினு லறிதல் முடியாதோ, எதனுல், மநம் அறியப்படுகின்றதோ, என்று கூறுகின்றன ரோ, அதனையே நீ பிரஹ்ம மாக அறி. இது வென்பதனுல் நீ உபாசனை செய்வது பிரஹ்ம மல்ல.

இது முதலிய அநேக சுருதிக ளிருக்கின்றன.

பிரசினம்:— நீர் ஈசுவரனை அங்கிகரிக்காவிடின், வேதத் தினை ஏன் அங்கிகரிக்கின்றீர்?

உத்தரம்:— வேதமோ பிரபஞ்சத்தின் நிஷேத பரமா யிருக்கின்றது. கேவலம் ஞாந மாத்திரத்தினைக் கூறுவதாக விருக்கின்றது.

பிரசிநம்:—வேதம் ஞாந மாத்திரத்தினையே எவ் வாறு கூறுகின்றது? கர்ம உபாசனைகளையும் கூறுகின்றதே?

உத்தரம்:— நான் கர்ம உபாசனைகளைச் சாதந கோடியி லங்கிகரிக்கின்றேன்.

பிரசிநம்:— இதில் ஒரு திருஷ்டாந்தங் கூறுவீராக.

உத்தரம்:— திருஷ்டாந்தம்: எங்ஙனம்? ஒரு புருஷன் தனது ஸ்தாநத்தில் ராஜாவினை யழைத்தற்கு இச்சை செய்தனன். முதலில் அந்த ஸ்தாநத்தினைப் பெரிதாகச் செய்தனன். பின்னர், மெத்தை தலை யணை வைத்தனன். அப் பொழுது, ராஜா வந்து உட்கார்ந்தனன்.

தார்ஷ்டாந்தம்:—முமுக்ஷு ரூபப் புருஷன், ஞாந ரூப ராஜாவை அழைத்தற்கு இச்சித்தனன். அப் பொழுது, புத்தி ரூப ஸ்தாநத்தில் கர்மத்தினைச் செய்தல் ரூப பெரிதா (சுத்த மா) கச் செய்தனன். உபாசநா ரூப மெத்தை தலை யணையை வைத்தனன். அப் பொழுது, ஞாந ரூப ராஜா வந்து உட்கார்ந்தனன். இக் காரணத்தினால், நான் வேதத்தினை அங்கீகரிக்கின்றேன். வேதத்தினை அங்கீகரிக்காவிடின், சிரவணாதிக ளடிபட்டுப் போம். சிரவணாதிக வின்றி ஞாந முண்டாகாது. இதனால், வேதத்திற்கு வியர்த்நத் தன்மை வரும்.

பிரசிநம்:— வாதி கூறுகின்றான். நான் வேதத்தினை அங்கிகரிப்ப தில்லை; வேதத்தினால் யாது பிரயோஜந முளது?

உத்தரம்:— உண்மையே. நீ வேதத்தினை அங்கிகரிக் காவிடின், தானாகத் தன்னை அங்கிகரிப்பாய்.

வாதி:— "தன்னை அங்கிகரிக்கின்றே" னென்று கூறினன்.

சித்தாந்தி:— 'தன்னை அங்கிகரிக்கின்', "நீ யா ரென்று அறிவிப்பாயாக" வென்று கூறினர்.

வாதி:— "நான் தேக" மென்று கூறினன்.

சித்தாந்தி:— அப்பொழுது, "தேகம் பஞ்ச பூத விகார மாம், ஜட மாம், அநித்திய மாம், திருசிய மாம்" என்று கூறினர்.

வாதி:— பின்னர், "யான் இந்திரியம்" என்றனன்.

சித்தாந்தி:— "இந்திரியங்களும், அபஞ்சீகிருத பூதங் களின் காரிய மாம், திருசிய மாம், ஜட மாம். பஞ்ச பூதங் களின் சத்துவ குணாம்சத்தினின்றும் ஞானேந்திரியங்களும், ரஜோ குணாம்சத்தினின்றுங் கர்மேந்திரியங்களும் உண்டா யிருக்கின்றன" வென்று கூறினர்.

வாதி:— பின்னர், "யான் பிராணன்" என்று கூறினன்.

சித்தாந்தி:— "பிராணனும் பஞ்ச பூதங்களின் சமஷ்டி ரஜோ குணாம்சத்தினின்று முண்டா யிருக்கின்றது. திருசியமும், அநித்தியமும், ஜடமு மாம். பிராணன் ஐந் தாம். நீ ஒருவனு யிருக்கின்றாய். பிராணன் கர்மங் களின் அதீந மாம்" என்று கூறினர்.

வாதி:— "நான் மந" மென்று கூறினன்.

சித்தாந்தி:— "மநமும் பஞ்ச பூதங்களின் சமஷ்டி சத்துவ குணாம்சத்தினின்று முண்டாயிற்று. இதனுனே, திருசியமும், ஜடமும், அநித்தியமுமா" மென்று கூறினர்.

வாதி:— அப் பொழுது, "நான் என்னை அறிய வில்லையா?" என்றனன்.

சித்தாந்தி:— "நீ உன்னையோ யறிந்தா யில்லை. ஆனுல், பாவ ரூப ஒரு வஸ்துவோ விருக்கின்றது? நீ அபாவ ரூபமோ யாகா" யென்றனர்.

வாதி:— 'ஏதோ வொன் றிருக்கின்ற' தென்று கூறினன்.

சித்தாந்தி:—" அறியா திருக்கும் அஞ்ஞாநமே காரண மாம். அதனை அறிபவன் நீயே" என்று கூறினர். நீ இருப்பதில் வேதம் பிரமாண மாம். அதனைக் கூறுகின்றேன்.

**"प्रज्ञानमानंदं ब्रह्म।" "अयमात्मा ब्रह्म॥"**

"பிரக்ஞாநமாநந்தம் பிரஹ்மம்"
"அயமாத்மா பிரஹ்மம்"

இதன் பொருள்:— சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தங்களை விளக்குவது ஆநந்தப் பிரஹ்ம மாம். இவ் வாத்மாவே பிரஹ்மம்.

பிரசிநம்:— வாதி கூறுகின்றான். பார்ப்பீராக. பின்னர், வேதம் பிரமாண மாக வந்தது; ஸ்வதப் பிரமாணம் பொருந்த வில்லை.

உத்தரம்:— வேதம் சப்த முதலியவற்றின் சாக்ஷி யாம். இது வென்னும் சொல்லினால், எந்த ரூப மென்று கூறுவ தில்லை.

24. ஸ்வதப் பிரமாண—பரதப் பிரமாண நிர்ணயத்தின் யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 25. அஹேரடியி (வேட) ன் திருஷ்டாந்தத்தினால் தத்துவ ஞாந உபதேச நிர்ணயத்தின் யுக்தி.

இப் பொழுது, அஹேரடியி (வேட) ன் திருஷ்டாந்தத் தினால் தத்துவ ஞாந உபதேச நிர்ணயத்தில் இரு பத் தைந்தாவது யுக்தி கூறப்படுகின்றது.

இதில், முதலில் திருஷ்டாந்தம்:— ஒரு அஹேரடி யானைக் கொண்டு ராஜாவி னிடத்து வந்தான். “நான் உம் மிடத்து மான் கொண்டு வந்திருக்கின்றேன். தாங்கள் போய் அதனை அடிப்பீராக” வென்று ராஜாவுக்குக் கூறினன். ராஜா யானை அடிக்கு மிச்சையினால், ரதத்தினை வர வழைத்து, குதிரை பூட்டிச், சாரதியினை

யுட்காரச் செய்து, வில் பாணம் கொண்டு, ரதத்தினி லுட்கார்ந்து வாரைப் பிடித்து, "என்ன மானைக் கொண்டு வந்தா" யென்று அஹேடியைக் கேட்டனன்; "எங்கிருக்கின்ற" தென்றனன். அவன் "மகா ராஜாவே மான் ஆம். உமது எதிரிலே யிருக்கின்ற" தென்றனன். அப்பொழுது, ராஜா வில்லின் மீது நாணைப் பூட்டிப் பாணத்தினு லடித்தான். பாணத்தினு லடித்தவுடன், அந்தப் பெண் மான் சுவர்ண மாயிற்று; இரண்டு குட்டியினை யீன்றது. இரண்டு குட்டிகளும் துள்ள வாரம்பித்தன. அந்தப் பெண் மானின் ஆச்சிரமம் கல்லாயிற்று. அதனது குடும்பம் யாவு மிறந்தன. அதன் மாதா பிதாக்கள் தேடியும் அகப்பட வில்லை. பெண் மானை யடித்த பாணமே மாறுய், ராஜாவின் மீது வந்து பாய்ந்தது. ராஜாவின் ரதம் லய மாயிற்று. அந்த அஹேடியு மிறந்தனன். ராஜாவின் சேனைகளு மிறந்தன. பார்ப்பதற்கு வந்தவர்கள் யாவரும் ஓடிவிட்டனர். இவ்வளவில், குரு சிஷ்யர்க ளிருவர் வந்தனர். சிஷ்யன் குருவின் பாதத்தினைப் பிடித்தனன். காலைப் பிடித்திருக்கும் பொழுதே குரு எழுந்தனர். குருவுடன் சிஷ்யனும் எழுந்து போயினன். இவ்வாறு சொப்பன முண்டானது.

தார்ஷ்டாந்தம்:— அஹேடி ரூப முமுக்ஷு வியவசாய ஆத்மக புத்தி ரூப மானைக் கொண்டு வந்தனன். ராஜா ஸ்தாந, குருவின் எதிரில் நின்றனன். மானைச் செய்தல் ரூபப் பிரகிருஞ் செய்தனன். ராஜா ரூப குரு, சங்காத ரூப ரதத்தி லுட்கார்ந்து கொண்டு சமாதானத்தினை அடைந்தனர். ஏனெனின், சங்காத ரூப ரதத்தில் இந்திரிய ரூபக் குதிரை

இருக்கின்றது. புத்தி ரூப சாரதி இருக்கின்றான். மன ரூப கடிவாள மிருக்கின்றது. விஷய ஸ்தான ரூப மார்க்க மிருக்கின்றது. குரு ரூப ராஜா, வேத ரூப வில்லினைக் கையிற் கொண்டு, பத்து உபநிஷத் ரூப நாணைப் பூட்டி, விசார ரூபப் பாணமும், யுக்தி ரூபச் சநியனு முடைய, தத்வ ஞான ரூபப் பலத்தினால், வியவசாயாத்மக புத்தி ரூபப்பெண் மானைப் பாணம் அடித்தது; பாணம் அடித்தல் ஸ்தான, உபதேசஞ் செய்யப்பட்டது. உபதேசஞ் செய்ததும் சுவர்ண ரூப சுத்த மாயிற்று. ஞான வைராக்ய ரூப இரண்டு புத்திரர்க ளுண்டாயினர். அப் புத்திரர்கள் ஆனந்த ரூபத் துள்ளுதலைச் செய்தனர். அந்தப் புத்தியின் ஆசிரம ரூப அந்தக் கரணம், கல் ஸ்தான மாய * சங்கற்ப விகற்ப மின்றிய தாயிற்று. இந்திரியம் பிராணன் மனம் தேக ரூபப் புத்தியின் குடும்பங்கள் யாவும் மரித்தன. அவித்யா ரூபத் தாயும், அவிசார ரூபப் பிதாவும், இருக்கு மிடந் தெரியாது போயினர். இருவரு மில்லாது போயினர் என்பது கருத்தாம்; அவர்க ளிருக்கின் அகப்படுவர். வியவசாயாத்மக புத்தியினை யடித்த, விசார ரூபப் பாணம், குரு ரூப ராஜாவி னிடத்தில் லய மாயிற்று. குரு இருந்த வண்ணம் ஆயினர் என்பது கருத்தாம். ராஜாவின் ரதத்தின் லய ஸ்தான ரூப குரு, சமாதியி லிருந்துவிட்டனர். அஹேடி ரூப முமுக்ஷுவின் அகங்கார மிறந்துவிட்டது. எவனை ஜீவ னென்று கூறுகின்றனர்? குரு ரூப ராஜாவின் சேனா ஸ்தான, சிரவண மனன நிதித்தியாசன ரூபச் சேனையின்

* சங்கல்பம் — மனத்தின் கதி. விகற்பம் — சம்சயம், அல்லது அஞ்ஞானம்.

லய முண்டாயிற்று. மானைப் பார்க்கும் ஸ்தான மாய அந்நிய சாஸ்திர வாதிக ளியாவரும் ஓட்ட மெடுத்தனர். அவர்கள் சித்தாந்தம் பொருந்த வில்லை என்பது பொரு ளாம். இந்த விசாரத்தில், குரு சிஷ்ய ரூப, இரு விகல்பங்க ளுண்டாயின. சிஷ்யன் பிரசின ரூபக் கையினால் பிரஹ்ம ரூபச் சிரத்தை செய்தனன். அதுவே காலைப் பிடித்ததாம். குரு சிஷ்யர்கள் எழுதல் ரூப இருவர்களின் வியவகாரம் லய மாயிற்று. இவ் வாறுய வியவகாரம் அஞ்ஞான ரூபச் சொப்பனத்தி லுண்டாகின்றது.

பிரசினம்:— புத்தி, அநேக விகல்பத்தினால் அநேக மாகின்றது. ஒரு புத்தியின் பிரமாணம் யாண் டிருக் கின்றது?

உத்தரம்:— கீதையில் பகவானது வசனம் பிரமாண மாம்.

**व्यवसायात्मिका बुद्धिरेकेह कुरु नंदन ।**
**बहुशाखा ह्यनंदाश्च बुद्धयोऽव्यवसायिनाम् ॥**

**(भगवत् गीता २—४१)**

"வியவசாயாத்மிகா புத்திரேகேஹ குரு நந்தந, பஹூ சாகா ஹ்யநந்தாஸ்ச புத்தயோவ்யவசாயி நாம்" (பகவற் கீதை 2—41)

இதன் பொருள்:— ஹே அர்ஜ்ஜுந! வியவசாயாத்மக புத்தி, சுத்த சத்வ குண முடையது, இந்தச் சகத்தில் ஒன்றே யாம். புருஷார்த்த மின்றிய புருஷர்கட்கு, அநந்த சாகை யுடையன வாய், அநந்த புத்திக ளிருக்கின்றன.

பிரசிநம்:— ஞாநி புருஷனுக்கு, இந்தச் சங்காத ரூப சாமக்கிரி ஏ னுண்டாயிற்று? இதில் பிரமாணம் யாது?

உத்தரம்:— விவேகியின் சஞ்சித கர்மம், ஞாந ரூப அக்நியினல் நாச மாயிற்று. அதனோடு ஞாநத்தின் பூர்வ காலத்தில் இத் தேகத்திற் செய்ததும் நாச மாயிற்று. ஞாநத்தின் பின்னர்ச் செய்யுங் கர்மம் ஞாநியினைப் பற்றுவதில்லை. காரணம் என்னை யெனின், சஞ்சித கர்மம் அஞ்ஞாநத்தின் ஆசிரயமா யிருக்கது. செய்யப்படும் (ஆகாமிய) கர்மம் அகங்காரத்தின் ஆசிரய மாக உண்டாகின்றது. அந்த அகங்காரம் நாச மாயிற்று. இதனல், ஸ்பரிசிப்ப தில்லை. பிராரப்த கர்மம் தேகத்தின் ஆசிரயமாம். இதனல், ஞாநியின் திருஷ்டியில் மித்தையாகத் தோற்றுகின்றது. முமுக்ஷு பிரசிநஞ் செய்ததனல் அச் சங்காத முண்டாயிற்று.

பிரமாணமுங் கேட்பாயாக.

**ज्ञानिनो ब्रह्मात्मज्ञाने जाते तेन बाधितस्यापि संचितकर्मणः प्रारब्धफलस्य कर्मणोऽबाधितत्वं अत एव ज्ञानिनस्तु प्रारब्ध वेगवशात् देहादि प्रतिभासते ॥**

"ஞாநிநோ பிரஹ்மாத்மஞாநே ஜாதே தேந பாதிதஸ்யாபி சஞ்சிதகர்மண: பிராரப்தபலஸ்ய கர்மணோ பாதிதத்வம், அத எவ ஞாநிநஸ் து பிராரப்த வேகவசாத் தேகாதி பிரதிபாசதே"

இதன் பொருள்:-- ஞாநிக்குப் பிரஹ்மாத்ம ஞாந முண்டாயின், அந்த ஞாநத்தினல் பாதிக்கப்பட்டது சஞ்சித கர்மமாம். ஆயினும், பிராரத்த பல கர்மம் பாதிக்கப்பட

வில்லை. இதனாலே, ஞானிக்கு மீண்டும் பிராரத்தத்தின் வேக வசத்தினால் தேகாதிகள் தோற்றுகின்றன.

பிரசிநம்:— ஆயின், ஞானிக்குச் சில அபேக்ஷை யிருக்கின்றது; சிஷ்யர்களுக்கு உபதேசஞ் செய்யவேண்டு வதாம்.

உத்தரம்:—ஞானிக்கோ, ஓரபேக்ஷையு மில்லை. சிஷ்யன் பிரசிநத்தினைக் கேட்டு, உபதேசஞ் செய்யப்படுகின்றது.

பிரசிநம்:— ஒரு திருஷ்டாந்தங் கூறுவீராயின், உமது வசநம் அங்கீகரிக்கப்படும்.

உத்தரம்:— திருஷ்டாந்தம்:— எங்ஙனம்? நகாராவிற் (பேரிகைக்) குப் பேச வேண்டு மென்னு மபேக்ஷை யில்லை; சப்த மின்றியு மிருக்கின்றது. ஆனால், ஒருவர் நகாராவை யடிக்கின் சப்த முண்டாகின்றது.

தார்ஷ்டாந்தம்:— அங்ஙனமே, நகாரா ரூப ஞானி புருஷன், அபேக்ஷை யின்றி யிருக்கின்றான். ஆனால், முமுக்ஷு ரூபப் புருஷன், பிரசிந ரூப நகாரா அடித்தலைச் செய்யின், ஞானி ரூப நகாராவினின்றும் சப்த முண்டா கின்றது. பிரசிந மின்றி யிருக்கு மிடத்து நிர்விகல்ப மாகவே யிருக்கின்றான்.

உன்னால் பிரமாணங் கேட்கப்பட்டது. அதுவும் கட வல்லி உபநிஷத்தில் கூறப்பட்டிருக்கின்றது. அதனைக் கேட்பாயாக.

आत्मानं रथिनं विद्धि शरीरं रथमेव तु।
बुद्धिं तु सारथिं विद्धि मनः प्रग्रहमेव च॥
कटवल्ली उपनिषत्॥ ३—३॥

इंद्रियाणि हयानाहुर्विषयांस्तेषु गोचरान्।
आत्मेंद्रियमनोयुक्तं भोक्तेत्याहुर्मनीषिणः (३—४)

"ஆத்மாநம் ரதிநம் வித்தி சரீரம் ரதமேவ து, புத்திந் து சாரதிம் வித்தி மந: பிரகிரஹமேவ ச" "இந்திரியாணி ஹயாநாகுர் விஷயாங்ஸ்தேஷு கோசராந், ஆத்மேந்திரியமநோ யுக்தம் போக்தேத்யாகுர் மநீஷிண:" (கட வல்லி உபநிஷத் 3, 3—4)

இதன் பொருள்:— "நீ ஆத்மாவினை ரதி யென்றுணர்க. சரீரத்தினை ரத மென்றுணர்க. புத்தியினைச் சாரதி என்றுணர்க. மநத்தினைக் கடிவாள மென்றுணர்க. இந்திரியத்தினைக் குதிரை என்றுணர்க. விஷயத்தினை மார்க்க மென்றுணர்க. சரீரம் இந்திரியம் மநம் என்னு மிவற்ரோடு கூடிய ஆத்மா சம்சாரி என்று விவேகிகள் கூறுகின்றனர்."

25. அஹேடியின் திருஷ்டாந்தத்தினுல் தத்துவ ஞாந உபதேச நிர்ணயத்தின் யுக்தி முற்றுப் பெற்றது.

---

## 26. ஞாந சொருபப் பிராப்தியின் யுக்தி.

இப் பொழுது, ஆரம்பிக்கப்பட்ட புருஷார்த்த சகுண நிர்க் குண நிர்ணய விஷயத்தில், ஞாந சொரூபத்தி னடைவின் இருபத்து ஆறுவது யுக்தி கூறப்படுகின்றது.

பிரசிநம்:— மகா ராஜாவே! பிராரத்தம் பெரிதா? புருஷார்த்தம் பெரிதா? அன்றிச், சகுணோபாசனை பெரிதா? நிர்க் குணோபாசனை பெரிதா? என்று ஒரு புருஷன் பிரசிநஞ் செய்தனன்.

சித்தாந்தி:— கூறுகின்றார். உனது பிரசிநத்தினை நான் உணர வில்லை. ஆனு லுனக் கொரு வார்த்தை கூறுகின்றேன். 'நீ புத்திமா னாயின் அறிந்து கொள்வா' யென்று கூறி, அவ் வார்த்தையினைக் கூறுகின்றார்.

திருஷ்டாந்தம்:— ஒரு வநத்தில் ஒருவ (உழுவோ) ன் உழவு செய்தனன். அந்த வயலில் சிவப்பு வெளிப்பட்டது. அந்தச் சிவப்பைப் பார்த்து, 'வயலில் நெருப்புப் பற்றிக் கொண்ட' தென்று உழுவோன் உணர்ந்தனன். இவ் வா றுணர்ந்து கை வைத்துப் பார்க்கின், நெருப்போ யில்லை. ஆனால், கல்லா யிருந்தது. அதனை எடுத் தெடுத்து வயலி னின்றும் வெளியி லெறிந்தனன். இவ் வளவில், ஒரு இரத்திந வியாபாரி வந்தனன். அவன் பார்த்துச் 'சிவப்போ அதி உத்தமமா யிருக்கின்றது. சிவப்பை யுடை யோன் மூடனா யிருக்கின்றான்' என் றுணர்ந்து, பின்னர் இரத்திந வியாபாரி, அவனை, "நீ என் செய்கின்றாய்" யென்று கேட்டனன். அப் பொழுது, அவன், "வயலில் கல் லிருக்கின்றது. அதனை வெளிப்படுத்துகின்றே" னென்றான். அப் பொழுது, இரத்திந வியாபாரி, "நானும் இதில் எடுத்துக் கொள்ளுகின்றே" னென்று கூறினன்; அவன், "நீ இஷ்டமா யிருக்கு மளவு எடுத்துக் கொள்" ளென்று கூறினன். அப் பொழுது, இரத்திந வியா

பாரி, சில சிவப்புகளை எடுத்துக் கொண்டு ஒரு அரசனைப் போய்ப் பார்த்தனன். அந்த ராஜா சிவப்புக்களைப் பார்த்துச் சந்தோஷ மடைந்து, இவ் வாருய சிவப்பை "இன்னும் கொண்டு வா" வென்று கூறினர். அப் பொழுது, இரத்நிந வியாபாரி, மகா ராஜாவே! "ஒரு பெரிய ராஜா விருக்கின்ருர். அவரது விட்டில் இவ் வாறு, அநேக சிவப்புக ளிருக்கின்றன. அவர் கொடுத்தால் அவரிடத்து நான் கேட்டு வாங்கிக் கொண்டு வருவே" னென்று கூறினன். அப் பொழுது ராஜா, "இவ் வாறு சிவப்போடு கூடி ராஜாவா யிருப்பவருக்கு, நான் எனது புத்திரியைக் கொடுக்கின்றே" னென்று கூறினர். அப் பொழுது இரத்தின வியாபாரி, மகா ராஜாவே! நீர் சம்பந்தஞ் செய்வி ராயின், "எனக்கு வாக்குத் தத்தஞ் செய்வீராக" வென்று கூறினன். அப் பொழுது ராஜா, "இவ் வாருய புருஷனுக்கு நான் அவசியம் என் பெண்ணைக் கொடுப்பே" னென்று பிரதிஞ்ஞை செய்தனர். அப் பொழுது, இரத்நிந வியாபாரி, உழவனிடத்துச் சென்று, அவனது உழுதல் தொழிலை விடுவித்தனன். பின்னர், தனது விட்டுக்குக் கூட்டி போய்ச் சிவப்பை மிகுதியாகச் சேர்த்துக் கொண்டனன். பின்னர், அந்த உழவனுக்கு வித்தை படிப்பித்து, நல்ல வஸ்திராபரணங்களை அணிவித்தனன். யானை, குதிரை எற்றங்களில் அப்பியாசஞ் செய்வித்தனன். ராஜாவோடு சந்திக்கும்படியான யோக்யதை செய்து, அநேகஞ் சேநா பரிவாரங்களுடன் கலியாணக் கோலஞ் செய்து, சிவப்புக்களை வாரி யிறைத்துக் கொண்டு ராஜாவிடத்துச் சென்றனர். அப் பொழுது

அந்த ராஜா, விதிப் பிரகாரம் தனது 'ஆநந்தமதி' யென்னும் பெயரை யுடைய பெண்ணைக் கொடுத்தனர். அதன் பின், விவாஹத்தின் மூன்றாம் நா ளாகிவிட்டது. நான்காம் நாளின் கர்மத்தின் பொருட்டு, ராஜ அரண் மனைக்கு அழைக்கப்பட்டனர். அப் பொழுது, இரத்தின வியாபாரி, உழவர் என்னும் பெயரினை யுடைய ராஜாவிற்கு, "நீ ஒருவருடனும் பேசற்க. யாது செய்யினும் விசாரஞ் செய்து செய்க. அப் பொழுது, சுகத்தினை யடைவா" யென் றறிவித்தனன். அப் பொழுது, அந்த உழவ ராகிய ராஜா, (ராஜாவின்) அரண்மனைக்குச் சென்றனர். அப் பொழுது, ஒரு சகி உட னிருந்தனள். அந்த அரண்மனை யில், "அநேகஞ் சாமக்கிரிகளோடு கூடி யிருக்கின்ற" தென்று கூறு மாறு, அநேக பிரகார மான சித்திரங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அதனைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்தனன். அந்தச் சித்திரங்களில், ஓரிடத்தில் ஒரு கிணறு போவதாகச் செய்யப்பட்டிருந்தது. அதனைப் பார்த்து மிருதுவாகச் சிரித்தனன். இந்த வார்த்தையினைச் சகி மநத்தில் வைத்துக் கொண்டு, "இவன் தாழ்ந்த குலத்தின னென்" றறிந்தனள். அவள் ராஜாவின் புத்திரி யிடத்துக் கூறிவிட்டனள். பின்னர், உழவ ராஜா, சித்திர சாலையிற் போ யுட்கார்ந்தனர். அப் பொழுது, ராஜாவின் புத்திரி சம்பூர்ண மாக அலங்காரஞ் செய்து கொண்டு, நான்கு முகங்களிலும் தீபஞ் சொலிக்கும்படி யான தாம்பாளத்தினைக் கையிற் கொண்டு, எதிரில் வந்தனள். அவளைப் பார்த்து உழவ ராஜா, "வா எனக்குச் சாப்பிட யாது கொண்டு வந்தா" யென்று

கூறி, சுவற்றின் வெளிப் பாகத்தினைப் பிடித்துக் கொண்டு கீழே விழுந்தனன். "அப் பொழுது, அந்த ராஜாவின் புத்திரி, தாம்பாளத்தினைக் குப்புறப் பூமியில் எறிந்து விட்டுச் சென்றனள். இவ் வளவி லிப் புருஷனுக்கு விசார முண்டாயிற்று. "இவளோ எனது ஸ்த்ரீ யாவ" ளென் றறிந்து மேல் மாடிக்குச் சென்றனன். அந்த ஸ்த்ரீயைப் பிடித்துத் தனது சரீரத்தி லணைத்துக் கொண்டனன். அப் பொழுது, சுக வடைவு உண்டா யிற்று.

தார்ஷ்டாந்தம்:— ஜீவ ரூப உழவன், சம்சார ரூப வநத்தில், உழுதல் ரூப, கர்மத்தினைச் செய்தனன். கர்மஞ் செய்யும் போ தவனுக்கு, சம்ஸ்கார ரூப அநேகஞ் சிவப்புக் கள் கர்ம பூமியி லுண்டாயின. அவற்றைப் பார்த்துத் "திப் பற்றல் ரூபக் கர்மங்களின் லோப முண்டாயின" வென் றுணர்ந்தனன். பின்னர்ப் பார்த்தல் ரூப விசாரத்தினால், "கர்மமோ லோப மாக வில்லை. ஆனால், தல் ரூப விக்ந முண்டானது" என்று உணர்ந்தனன். அப் புருஷன், சிவப்பு ரூபச் சம்ஸ்காரங்களைக் கர்ம பூமியினின்றும் வெளிப்படுத்தல் ரூபத் திரஸ்காரத்தினைச் செய்தனன்.

பிரசினம்:— கர்மத்தினின்றும் சம்ஸ்காரம் பெரிதா யிருக்கின்றது. அதனது திரஸ்காரம் எவ் வாறு செய்யப் பட்டது?

உத்தரம்:— அடே தம்பி! கர்மேஷ்டி! சம்ஸ்காரத் தின் சாரம் யாதென் றுணர்ந்தாய்? காரணம் என்னை யெனின், சைதந்யம் அஞ்ஞான உபகித மாம். கர்மம்

அஞ்ஞாநத்தின் காரிய மாம். இதனுல், இவ் வளவில் குரு ரூப இரத்திந வியாபாரி வந்தனர். அவர் பார்த்து, "இவனது சம்ஸ்கார ரூபச் சிவப்போ உத்தம ரூபப் பிரகாச மா யிருக்கின்றது. ஆனு லிவனது புத்தியோ மூடமா யிருக் கின்ற" தென் றுணர்ந்து, "நீ என் செய்கின்ருய்" என்று கேட்டனர். இக் கேள்வியினுல், சித்தத்தின் ஸ்திதி கர்மத்தில் இருக்கின்றதா? இல்லையா? வென்று நிர்ணயஞ் செய்யப்பட்டது. அப் பொழுது உழவர், "கல் லிருக் கின்றது. அதனை வெளிப்படுத்துகின்றே" னென்று கூறினர். இதனுல், உழவர் ரூப ஜீவன், "கர்மங்களில் விக்ந முண்டாகின்றது. அதனை நிவிர்த்திப்பே" னென்று கூறினன். அப் பொழுது, இரத்திந வியாபாரி ரூபக் குரு, "நானும் இதனின்றும் எடுத்தல் ரூபக் கிரகணஞ் செய் கின்றே" னென்று கூறினர். அப் பொழுது, உழவர் ரூபக் கர்மஞ் செய்வோன், "நீர் எடுத்தல் ரூப எனது விக்நத் தினை நிவிர்த்தி செய்வீராக" வென்று கூறினன். அக் கால், இரத்திந வியாபாரி ரூபக் குரு, சில சிவப்பு ரூபச் சம்ஸ்காரத்தினை எடுத்தல் ரூப மாக உணர்ந்து, சில ராஜாவினைப் போய்ப் பார்த்தல் ரூப, ஈசுவரனுக் கறிவித் தனர். அப் பொழுது, ஈசுவர ரூப ராஜா, சிவப்பு ரூபச் சம்ஸ்காரங்களைப் பார்த்தல் ரூப மாக வுணர்ந்து, மிகச் சந்தோஷ மடைந்து, "இவ் வாருய சிவப்பை இன்னும் கொண்டு வருக" வென்று கூறினர். இதனு "லிவ் வாருய சம்ஸ்காரம் பின்னுஞ் செய்க" வென்று கூறப்பட்ட தாம். அப் பொழுது, இரத்திந வியாபாரி ரூபக் குரு, "ஹே மகா ராஜா ரூப ஈசுவரா! ஒரு பெரிய ராஜா ரூபக் கர்மேஷ்டி

பிருக்கின்றான். அவனது வீட்டு ரூபக் கர்ம பூமியில், இவ்வாறு அநேகச் சிவப்பு ரூபச் சம்ஸ்காரங்க ளுண்டாகின்றன. அவர் கொடுக்கின் அவரிடத்தினின்றும் நான் கேட்டு வாங்கிக் கொண்டு வருகின்றே" னென்று கூறினர். இதனால், "இவனுக்கு இச்சை யுண்டாயின், (அஃதாவது - இச்சா ரூபப் புருஷன், புருஷார்த்தஞ் செய்வனாயின்,) அவனுக்கு இன்னும் சம்ஸ்காரங்களைத் தமது எதிரிற் செய்வே" னென்று கூறப்பட்ட தாம். அப்பொழுது, ராஜா ரூப ஈசுவரன், "இவ்வாறு சிவப்பு ரூபச் சம்ஸ்காரங்களை யுடைய ராஜா ரூபக் கர்மேஷ்டிக்கு, எனது புத்திரி ரூப, எனது பரமேசுவர னுய என்னை விஷயஞ் செய்யும் வியவசாய ரூபப் புத்தியைக் கொடுப்பே" னென்றனர். அப்பொழுது, இரத்தின வியாபாரி ரூபக் குரு, "ஹே! மகா ராஜா ரூப ஈசுவரனே! நீர் சம்பந்தஞ் செய்தல் ரூபப் பக்தியினை யவருக்குக் கொடுப்பீ ராயின், எனக்கு வாக்குத் தத்தஞ் செய்தல் ரூப ஆக்ஞையினைக் கொடுப்பீராக" வென்று கூறினர். அப்பொழுது, ஈசுவர ரூப ராஜா, "இவ்வாருய முமுக்ஷு ரூபப் புருஷனுக்கு, அவசியம் வியவசாயாத்மகப் புத்தி ரூபப் புத்திரியைக் கொடுப்பே" னென்று, பிரதிஞ்ஞை செய்தல் ரூப நிச்சயத்தினைச் செய்தனர்.

பிரசிநம்:— இவ்வாறு, ஈசுவரனது பிரதிஞ்ஞை யாண்டுக் கூறப்பட்டிருக்கின்றது? ஈசுவரனே? ஆப்தகாம னவன்.

உத்தரம்:— கீதையில் கூறப்பட்டிருக்கின்றது.

**ये तु सर्वाणि कर्माणि मयि संन्यस्य मत्पराः ।**
**अनन्येनैव योगेन मां ध्यायंत उपासते । १२—६ ॥**
**तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।**
**भवामि नचिरात्पार्थ मय्यावेशितचेतसां ॥ १२—७ ॥**

"யே து சர்வாணி கர்மாணி மயி சந்யஸ்ய மத்பரா:;
அநந்யேநைவ யோகேந மாம் தியாயந்த உபாசதே
(12—6)
தேஷாமஹம் சமுத்தர்த்தா மிர்த்யுசம்சாரசாகராத்,
பவாமி நசிராத்பார்த்த மய்யாவேசிதசேதசாம்"
(12—7)

இதன் பொருள்:— பரமேசுவர ஞகிய என்னிடத்தில் எல்லாக் கர்மங்களையும் அர்ப்பணஞ் செய்து, என்னைத் தியாநஞ் செய்பவ ராய், அநந்ய யோகத்தி (ஏகாந்த பக்தியி) ஞல் உபாசிக்கின்றனரோ, இவ் வாறு கூறிய பிரகார மாக, என்னிடத்தில் நிலைக்கப் பெற்ற மந முடையோருக்கு, மிருத்யுவோடு கூடச் சம்சார சாகரத்தி னின்றும் நான் நன்ருகச் சிக்கிரம் கடப்பிக்குங் கர்த்தா வாகின்றேன்.

இவ் வாறு, ஈசுவரன் பிரதிஞ்ஞை செய்திருக்கின்றனர். அப் பொழுது, இரத்திந வியாபாரி ரூபக் குரு, உழவோன் ரூபக் கர்மேஷ்டியி னிடத்து வந்து, அவனது உழுதல் ரூபக் கர்மத்தினை விடுவித்தனர். பின்னர், தனது வீட்டு ரூப விசாரத்தில், கொண்டு போதல் ரூபத்தைச் செய்தனர். அநேகச் சிவப்பு ரூபச் சம்ஸ்காரங்களைச் சுருக்கி, அந்த

உழவர் ரூபக் கர்மேஷ்டிக்கு, வித்தையினைப் படிப்பித்தல் ரூபச் சிரவணஞ் செய்வித்தனர். நற்றுகில், ஆபரண ரூப, ஒன்பது வித பக்தியினைச் செய்வித்தனர். யானை குதிரையில் ஏறுதல் ரூப, பக்தியின் யசஸ் அறிவிக்கப் பட்டது. ராஜா ரூப ஈசுவரனோடு, சேர்தல் ரூப எதிர்ப் படற்கு, யோக்ய மாகச் செய்தல் ரூப ஸ்திதி செய்யப் பட்டது. அநேக சேநா ரூப விநயத் தன்மை, சீலத் தன்மை முதலியவற்றினை யுடன் கொண்டு, கலியாணக் கோல மாதல் ரூப முமுக்ஷுத் தன்மையோடு, சிவப்பினை வாரி இறைத்தல் ரூப வைராக்கியத்தோடு கூடிய முமுக்ஷு வை, ராஜா ரூப ஈசுவர னிடத்துக், கொண்டு போய் விடுதல் ரூப எதிர்ப்படலைச் செய்தனர். அப் பொழுது, ஈசுவர ரூப ராஜா, விதிப் பிரகார ரூப, சம்பிரதயாக பூர்வம் தனது 'ஆநந்த மதி' யென்னும் பெயரினை யுடைய வியவசாயாத்மக ரூபப் புத்திரியைக் கொடுத்தனர். அதன் பின், கலியாணத் தின் மூன்று நாள் சென்றதென்ப தானது:— வியவசாய ரூபப் புத்தியின் எதிர்ப்படலால் முமுக்ஷுவிற்குச் சிரவண மநந நிதித்தியாசநங்கள் மூன்றும் உண்டாயின வென்ப தாம். அப் பொழுது, நான் காவது நாட் கர்ம ரூபச் சாக்ஷாத்காரத்தின் பொருட்டு, ராஜ அரண் மனை ரூப முத்தியில் அழைக்கப்பட்டது. அப் பொழுது, இரத்திந வியாபாரி ரூபக் குரு, உழுதற் பெயரினை யுடைய ராஜா ரூப முமுக்ஷுவிற்கு உபதேசஞ் செய்தனர்; மற்றும், "நீ ஒருவருடனும் பேசற்க" வென்றும் கூறினர். இதனல், "பிரஹ்ம சொரூபம் அநிர்வசநீய மாம். வியர்த்த மாகக் கூறுதலும் யோக்ய மன்றும்" என்று கூறப்பட்டதாம்.

பிரசிநம்:— வசந மின்றி ஒரு காரியமுஞ் செய்ய முடியாது. நீர் கூறிய வாறு யான் டிருக்கின்றது? எனக்கோ சாஸ்திரம் பிரமாண மாம். அதனைக் கூறுகிறேன்.

**सर्वेषां संग्रहः कार्यः कः कालः फलदायकः ॥**

"சர்வேஷாம் சங்க்ரஹ: கார்ய: க: கால: பலதாயக:

இதன் பொருள்:— எல்லா வஸ்துக்களையும் கிரகணஞ் செய்தல் யோக்ய மாம். சில பதார்த்தங்கள், சில காலத்திற் பலத்தினைக் கொடுக்கும்.

உத்தரம்:— அடே வாதி! எனக்குச் சுருதி பிரமாண மாம்.

**नानुध्यायात् वहून् शब्दान्वाचो विग्लापनं हि तत् ॥**

**(व्रहतारण्यकोपणिषत् ४—४—२।)**

"நாநுத்யாயாத் பகூந் சப்தாந் வாசோ விக்லாபநம் ஹி தத்" (பிரஹதாரண்யகம் 4—4—2)

இதன் பொருள்:—நிச்சய மாக வேதாந்த சாஸ்திரத்தினும், வேறான அநேக சாஸ்த்ரங்களைப் படிக்கற்க. அந்த வேறு சாஸ்த்ரங்களின் சப்தங்களினால் வாக்கிற்கு வியர்த்த மான சிரம மாம்.

"யாது செய்யினும் விசாரஞ் செய்து செய்க" என்று கூறப்பட்டது. இதனால், "சைதந்யத்தை மாத்திரமே விசாரணை செய்க" வென்று கூறப்பட்ட தாம். அப்பொழுது, ஆநந்த ரூபச் சுகத்தினை அடைவான். அப்பொழுது, அந்த உழவ னென்னும் பெயரினை யுடைய

முமுக்ஷு ரூப ராஜா, (ராஜ) அரண் மனை ரூப முத்தியில் சென்றனர். விசார ரூப ஒரு தோழி உட னிருந்தனள். அநேகப் பிரகார மாக அத்தியாரோப ரூபச் சித்திர வீடு, சாமக்கிரிகளோடு கூடியதாக விருந்தது. அரண் மனை ரூபம் முக்தி யாம். அதில் அநேகப் பிரகார மாக அத்தியா ரோபத்தினைப் பார்த்தல் ரூப விசாரஞ் செய்து கொண்டு, நடத்தல் ரூப விர்த்தியினைச் செய்து கொண்டிருந்தனர். அந்தச் சித்திரக் கட்டிடத்தில், ஓரிடத்தில் ஒரு கிணறு போலவ தாகச் செய்யப்பட்டிருந்தது. அதனைப் பார்த்து மூட மாகப் புன் முறுவல் செய்தனர். இதனுல், "அத்தியாரோபத்தில் எத்தனை கர்மங்களின் பலத்தில் ஞாபகம் உண்டாகின்ற" தென்று கூறப்பட்ட தாம். அதனை விசாரணை செய்து, சித்தத்தில், "இது கர்மங் களின் பலனே" என்று தோன்றிற்று. இதனுல் பிரசந்ந ருயினன். அப் பொழுது, இந்த வார்த்தை ரூப வியவ காரத்தினை, விசார ரூப சகி, ஞாபகம் வைத்தல் ரூபக், கிரகணத்தினைச் செய்தனள். "இந்த முமுக்ஷு, குலத்தின் தாழ்வு ஸ்தாந ரூப, கர்ம பலத்தினை யிச்சிக்கின்றனன்" என்று உணர்ந்தனள். இவ் வாறு, விர்த்தியில் நிச்சய முண்டாயிற்று. அதுவே ராஜாவின் புத்திரி ரூப வியவ சாயாத்மகப் புத்தியில், சொல்லுதல் ரூப ஸ்திதி செய்யப் பட்டது. முமுக்ஷு ரூப ராஜா, சித்திரச் சாலை ரூப முத்தி வீட்டில், இருத்தல் ஸ்தாந ரூப, ஸ்திதியை யடைந்தனர். இவ் வாருய சுகம் 'உபாசனையினு லுண்டாகின்ற' தென்று விசாரஞ் செய்தனன். முக்தி ரூபச் சித்திரச் சாலை யாகப் பிரஹ்ம லோகத்தினைக் கூறுகின்றனர். காரணம்

யா தெனின், * சாலோக்யம், சாமீப்யம், சாரூப்யம், சாயுஜ்யம் என நான்கு பிரகார மான முக்தி உபாசனையில் கூறப்பட்டிருக்கின்றது. இவ் வாறுய ஆசிரமம் பிரஹ்ம லோகத்திற்குச் சமாந மாக ஞாநிக் குண்டாகின்றது.

பிரசிநம்:— நன்று கபோல கற்பித ஸ்துதி செய்யப் பட்டது. தன் வீட்டினை எல்லாரும் உத்தமம் (என்று) கூறுகின்றனர். பிரமாணம் இன்றி நான் அங்கீகரிப்ப தில்லை.

உத்தரம்:— அடே! வாதி! மநு ஸ்மிருதியில் கூறப் பட்டிருக்கின்றது.

**वेदवेदार्थतत्त्वज्ञो यत्र कुत्राश्रमे वसन् ।**
**इहैव लोके तिष्ठन् सन् ब्रह्मलोकाय कल्पते ॥ १२—१०२ ॥**

"வேதவேதார்த்ததத்வக்ஞோ யத்ர குத்ராசிரமே வசந், இஹைவ லோகே திஷ்டந் சந் பிரஹ்ம லோகாய கல்பதே" (12—102)

இதன் பொருள்:— வேதம், வேதார்த்தம், அவற்றின் தாத் பர்யங்களை அறிந்த புருஷன், எந்த ஆசிரமத்திலும் வசித்துக் கொண்டு, இந்த லோகத்தின்கண்ணே இருந்தே, பிரஹ்ம லோகத்தின் பொருட்டு யோக்கிய மாகின்றான்.

* சாலோக்யம் — சமாந லோகத்தில் இருப்பது. ஈசுவானது லோகத்தில் வாசம் செய்தல் என்பது பொருள். சாமீப்யம் — ஈசுவானது சமீபத்தில் வாசம் செய்த லாம். சாரூப்யம் — ஒரு சரூப மாதல், ஈசுவானுக்கு வேறாய், ஈசுவானுக்குச் சமாந ரூப மாத லாம் என்பது பொருள். சாயுஜ்யம் — ஈசுவான் ஜீவன் இருவரும் அபேத மாத லாம்.

அப்பொழுது, ராஜாவின் புத்திரி ரூப வியவசாயாத்மகப்புத்தி, சம்பூர்ண அலங்கார ரூபச், சுத்தத் தன்மையோடு கூடி, நான்கு முகத் தீபத்தின் விளக்க ரூப, நான்கு வேதத்தின் சார ரூப ஞானத்தினை யுடைய, ஞான காண்ட ரூபத் தாம்பாளத்தினோடு கூட, எதிரில் வருதல் ரூப, உதயம் ஆயினள். அதனைப் பார்த்து, ராஜா ரூப முமுக்ஷு, "வா எனக்குச் சாப்பிட யாது கொண்டு வந்தாய்" என்னும் வசநம் கூறப்பட்டது. இதனால், "நான் விருத்தியினால் அறியப்படுகிறவன்" என்று கூறப்பட்டது. எது திருசிய மாகின்றதோ, அது பரிணாமி யாகின்றது. இதனால், அபசித்தாந்தம் ஆயிற்று; இவ் வாறு கூறிக் கொண்டு, சுவற்றின் வெளிப் பாகத்தினைப் பிடித்துக் கொண்டு, கீழே விழுந்தனன். இதனால், "நான் முக்தி ரூப வீட்டினின்றும் கீழே விழுகின்றேன். நான் முக்தியினை அடைய மாட்டேன்" என்னும் பொருள் தோற்றுகின்றது. மற்றும், சுவற்றின் வெளி ரூப அபான ஆவரணத்தினைப் பிடித்துக் கொண்டிருந்தனன். அபான ஆவரணம் என்பது தன்னைப் பரோக்ஷ மாக அறிவ தாம். அப்பொழுது, அவ் வரசனின் புத்திரி ரூப வியவசாய ஆத்மிகா புத்தி, தாம்பாளத்தினைக் குப்புறப் போடுதல் ரூப வேதத்தின் சாரத்தினைத் தியாகம் செய்தனள். மற்றும், போதல் ரூப, முகத்தினை மாற்றிக் கொண்டனள். இதனால் அஞ்ஞானம் சித்த மாயிற்று. அது, **"मामहं न जनामि"** "மாமஹம் ந ஜாநாமி" என்று கூறப்படுகின்றது. இதன் பொருள்:— நான் என்னை உணரவில்லை என்பது தாம். இக் காலத்தில் முமுக்ஷு ரூப ராஜாவிற்கு, விசாரத்தின் வெளிப்படுத்தல் ரூப ஞானம் உதயம்

